"கைப்பொருள் பெற்றஞான்றே கடவுள்ஆ லயத்துக்கு ஈந்தும்
மெய்ப்படு புராண நூல்கள் விதிமுறை கேட்டு வந்தும்
வைப்பென இரப்போர்க்கு ஈந்தும் வருபவர் உளரேல் கூற்றம்
மொய்ப்படு தண்டம் நீங்கி முன்னவன் இன்பத்து ஆழ்வார்"

என்கிறபடி ஈகைக்குணம் இல்லாத தனவந்தரைப் பின் பற்ருதிருக்கவும், யாசிப்பவர்க்கு இல்லையென்ளு துதவவும், நியாயவழியில் விர்த்தியாகவல்ல செல்வத்தையும், நோயற்ற வாழ்வையும், ஞானமார்க்கத்தில் நின்று நிஷ்டை கூடிச் சுவானுபூதி பெறும் பேற்றையும், அறிவின்கண் குருவாயிருந்து அனுக்கிரகம் புரிந்த இறைவனது திருவருளை வியந்து பேசுகின்ருர்.

"கரவாது உவந்து ஈயும் கண் அன்ஞர் கண்ணும்
இரவாமை கோடி யுறும்"

"சினக் கதிர்வேல் கண்மடவாய் செல்வர்பால் சென்றீ
எனக்கு என்னும் இம்மாற்றம் கண்டாய்—தனக்கு உரிய
தானம் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானம் துடைப்பதோர் வாள்"

என்கிறபடி யாசகார்த்தமாக 'ஒருவர் பின் செலாது' எனவும்,

"இயல்வது கரவேல்" என்கிறபடி யாசகர்க்கு 'இல்லையென்னும் உரை பேசிடாது' எனவும்,

"தோன்றிற் புகமொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் ரேன்ருமை நன்று"

என்கிறபடி மக்களாய்ப் பிறக்கின் புகழுக் கேதுவாகிய குணத்துடன் பிறத்தல் வேண்டுமாதலின் 'உலகில் எவரும் ஆமென மதிக்கவே' எனவும்,

எல்லா நன்மையும் உடையராயினும்,

"இல்லாரை யெல்லாரும் எள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு"

என்கிறபடி பொருளில்லாதவரை எல்லோரும் பொருட்படுத்தாராதலின் 'நெறியின் வைகிவளர் செல்வமும் உதவி' எனவும்,

சகல போகங்களும் மிகுந்திருந்தும்,

நோய் மேலிட்டிருக்குமேல் உடல் நிலைபெருதாகலின் 'நோய்களற்ற சுக வாழ்க்கையாய்' எனவும் கூறினர்.

செல்வ முதலியவை நிலையானவை யன்றென்றுணர்த்தி முத்திக் கேதுவாகிய நியமங்களின் நிலையில் நின்று ஞானநிஷ்டை கூடும்படி அந்தர் முகத்தினும் தெரிசித்துப் பகிர் முகத்தினும் வெளிவந்து ஆட்கொண்டருளிய கிருபா விசேஷத்தை எவ்வாறு புகழ்வேன் என்பார் 'நியமமாதிநிலை.......... திருவுளத்தினி விருந்ததோ' என்ருர்.

எறிதல்=வீசுதல்.

அல்லல்=துன்பம்.

நெறியில்=நன்மார்க்கத்தில்.
வைகல்=தங்கல்.
நியமம் ஆதி=அஷ்டாங்க யோக முதலிய நிலை.
அகிலம்=பிரபஞ்சம்.

2. மல பரிபாகம் உண்டாமளவும் வெளிப்படாது கருணையே வடிவமான அந்தராத்மாவாக உள்ள இறைவன் உள்ளத்திற் கிரங்கிப் போகத்தைக் கன்மத்திற்குத்தக்கபடி யூட்டி வருகிறவனாகலின் 'உள்ளத்தினுள்ளே...... தரமாமோ'' என்றனர்.
விடக்கு உண்பார்=மாமிசத்தைப் புசிப்பவர்.
வெள்ளத்தைமாற்றி=பள்ளத்துள்ள நீர்ப்பெருக்கை வடியச்செய்து.
நஞ்சு=விஷத்தை.
ஊட்டும்=சிறிது நீரிற் கலக்கும்.

3. அன்பின் மயமாகி யுள்ளவர்க்கே இறைவன் எவ்விதத்தும் துணைபுரிவன் என்பார் 'அன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்' என்றனர்.

" அன்பினுள் ளாகி யமரு மரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே யணைதுணையாமே'' என்று **திருமந்திரம்** கூறுவதுங் காண்க.

வாவி=தடாகம்.
துவண்டு=வாடி.
ஆவிக்குள் நின்ற வுனக்கு=உயிர்க்குயிராக நிலைத்திருக்கின்ற இறைவனாகிய உனக்கு.
அஞ்சல்=அஞ்சாதே.
வான்=சிறந்த.

ஆனந்தபோதினி

அக்ஷயஹூ ஐப்பசிமீ கூ

## தமிழின் நிலைமை.

உத்தம மதிப்புக்கு ஒத்ததாய் உயர்வுபெற்றுள்ள பரதகண்டத்தில் திருவேங்கடத்தை வட எல்லையாகவும், கன்னியாகுமரியைத் தென் எல்லையாகவும், சமுத்திரத்தைக் கீழெல்லை மேலெல்லையாகவும் உடைய தென்னாடே தமிழ் வழங்கும் நாடாம்.

அதுபற்றியே தமிழ் தென்மொழி என்னும் பெயரை யடைந் துள்ளது. "தேசங்கள் தோறும் பாஷைகள்வேறு" என்பதை அனைவரும் அறிவர். அந்தந்த நாட்டார்க்கு ஆங்காங்கு வழங்கும் பாஷையே தாய்ப்பாஷையாய் மேம்பாட்டுக் குரியதெனக் கருதப் படும். தாய்ப்பாஷை அல்லது தாய்மொழி என்பது தாயின் வாயி லாகக் குழந்தைகளுக்கு முதன் முதல் கற்பிக்கப்பட்டுவரும் மொழி யாம். இவ்வாறு கற்பிக்கப்பட்டுவரும் ஒலிவடிவமாயுள்ள மொழி யைச் செவியேற்றுக் குழந்தைகள் மழலைப்பேச்சிலிருந்து தேர்ந்த பிறகே தந்தையாலும் வித்தியா குருவாலும் வரிவடிவில் அம் மொழியைக் கற்று நாளடைவில் அறிவின் அபிவிர்த்தியைப் பெறுகின்றன. ஆகவே ஒவ்வொருவரும் தத்தமது தாய்மொழி யில் பெரிதும் சிரத்தை வைக்கவேண்டியது அத்தியாவசிய மென் பதை நாம் கரதலாமலகம்போற் காண்கிறோம்.

தாய்மொழியைக் கவனியாது பிறமொழியைப் பாராட்ட முய லுவோர் "பெற்றதாய் வயிற்றினைப் பெருநோய் செய்வான் பிறந் தார்களே" என்னும் ஆன்றோர் கூற்றுக்குச் சான்றுவரன்றோ? அன்றியும் அவர்களது இத்தகைய பாரபட்சமான செயலைக் கண்டு உலகம், அவர்களை நோக்கி, நகையாடாமற் போமா? அறையிலாடி யல்லவா அம்பலத்துக்கு வரவேண்டும். "தனக்கு மிஞ்சி தருமம்" என்பதை நாம் மறந்துவிடலாமா? ஐயோ! "தன்னைப் பெற்றதாய் கிண்ணிப்பிச்சை எடுக்கிறாள், தம்பி கும்ப கோணத்தில் தானதருமஞ்செய்கிறான்" என்னும் உலகாபவாதத்துக் குட்படவா நாம் தமிழ்த்தாய் வயிற்றில் ஜனித்தோம்! "பால்வாய்ப் பசுந்தமிழ்" என்ற சிறப்புப்பெயர் நமது அந்தமிலின்பச் செந்தமி ழுக்கு எதுபற்றி வந்ததென்பதை நாம் சிறிது ஊன்றி நோக்குவோ மாயின் அதன் அருமை பெருமைகள் இனிது புலப்படும். இளம் பிராயத்திலிருந்து நமக்குப் பயிற்றப்பட்டு வருவதன் காரண மாகவே இதனைப் பசுந்தமிழ் என்றழைக்க நேர்ந்த தென்பது ஒருதலை.

இத்தன்மையான "தழற்புரை சுடர்க் கடவுள்தந்த தமி"ழைப் பிரசித்தப்படுத்தி, அந் "நீண்டதமிழாலுலகை நேமியினளந்"து அவ் "என்றுமுள தென்றமிழியம்பி யிசைகொண்ட" அகத்திய முனிவரின் கிருபாவிசேஷம் கொண்டாடத்தக்கதே.

இந்தச் சந்தத்தமிழின் தனிப்பெருஞ் சீரையும் புராதனத்தை யும் பற்றியவிஷயம் அறிவாளர் பலரால் நமது "ஆனந்தபோதினி" சஞ்சிகைகளில் ஏற்கனவே வெளி வந்திருக்கிறதுமன்றி இதரபத்திரி கைகளின் வாயிலாகவும், பல்வேறு புத்தகவாயிலாகவும் தோன்றி யும் தோன்றிக்கொண்டு மிருக்கிறது. அறிய அறிய முன்னை யறி யாமை கண்டாற்போலக் காணப்படுதலின் இதனைக்குறித்து மேன் மேலும் பேச ஆசைமேலிடுகின்றது. நிற்க:—

"ஆனைக்கும் அடிசறுக்கும்" என்னும் பழமொழிப்படி தண்ட மிழுக்கும் ஒருகாலத் தொருகுறை ஏற்பட்டதென்பர் சிலர். அதனை விளக்குதற்கு "சிவபிரான் பார்வதிதேவியாரைத் திருமணஞ் செய்து கொள்ளும்போது, தேவர் முனிவர்கள் ஒன்று கூடியிருந்தனர்; அச் சமயம் பூமி வடபக்கந்தாழ்ந்து தென்பக்கம் உயர்ந்தது; அதுகண்டு தேவர்கள் அதன் காரணம் யாதோவென்று விசுவகர்மாவைக் கேட் டனர்; விசுவகர்மா 'உம்பர்காள்! இப்போது இங்குவந்திருக்கும் அகஸ் தியர் தென்றிசை செல்லுவாராயின் பூமி பழமைபோலாகும்' என்ற னன்; அவ்வாறே குறுமுனிவர் அத்திசைக்குப் போகும்படி நிய மனம் உண்டாயிற்று; முனிவருக்கு இவ்வேற்பாடு மனஸ்தாபத்தை எழுப்ப அவர் விசுவகர்மாவைச் சபித்தனர்; விசுவகர்மாவும் அகஸ் தியரால் வளர்க்கப்பட்ட தமிழுக்குச் சாபமிட்டனன்" என்றும், அச் சாபதோஷம் பகவானுடைய அனுக்கிரகத்தால் நிவர்த்தியாய், நால்வர், நாயன்மார், பன்னிருவராதி பெரியாரால் தமிழ்மறைகள் பாடப்பெற்று, கீர்வாணமறை தெளிவுறுத்தாத அர்த்தவிசேஷங் கள் யாவருக்கும் தெளிவுறுத்தப்பட்டன என்றும் கர்ண பரம்பரை யாக வழங்கிவரும் கதை யொன்றுண்டு. இக்கதை எவ்வாறாயினு மாகுக.

தமிழின் முன்னைய நிலைமை எவ்வாறிருந்த தென்பதையும், இப்போதுள்ள நிலைமை எவ்வளவிலிருக்கிறதென்பதையுங் கொஞ் சங் கவனிப்பாம்:

"ஒல்காப் பெரும் புகழ்த் தோல்காப்பியம்" என்னும் தமிழ் நூலொன்றிருக்கிறது. இஃது இயல் நூலே; ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குமுன்பு அதாவது மதுரையம்பதியில் விளங்கிவந்த முச்சங்கத்துள் முதற் சங்ககாலத்தில் வெளிப்போந்தது. இதனை வெளியிட்டவர் தமிழ்வரம்புகண்ட தொல்காப்பியராவர். இந்

நூலின்கண், மக்களுக் குறுதி பயப்பனவாய அறம் பொருள் இன்பம் வீடென்னும் புருஷார்த்தங்கள் நான்கும் அகம் என்றும் புறமென்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அகப்பிரிவில் மக்கள் இந் நிலவுலகில் அனுபவித்தற்குரிய இன்பநிலையும், புறப் பிரிவில் அறம், பொருள், என்பவற்றின் தன்மையும், அறம், பொருள், இன்பங்களின் நிலையாமையும், வீட்டின் திறமும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வண்ணம் வேறு எம்மொழி இயல் நூலாரும் கூறவில்லை என்பது கண்கூடு.

மொழியாளரனைவர்க்கும் பொதுவான எழுத்து சொல் என்பவற்றின் ஆராய்ச்சியோடு சொல்லின் கருவியான பொருளாராய்ச்சி தொல்காப்பியரிடம் பெரிதும் பாராட்டற்குரியதா யமைந்திருக்கிறது. பொருளதிகாரத்தில் குறித்துள்ள கந்தழி முதலிய பதங்களை நாம் ஆழ்ந்து நோக்குவோமாயின் அக்காலத்தில் தமிழ் மக்களிடமிருந்த தெய்வ நம்பகம் நன்கு விளங்கும். அவர்களின் நிலையுஞ் சிறப்புற்றிருந்த தென்பதும் புலனும். இவ்வாறு தமிழ்மக்கள் தொல்காப்பியர்காலத்திலேயே மேன்மையுற்றிருந்தனரென்றால் அவருக்கு முன்னிருந்த தமிழர் தத்துவ ஆராய்ச்சியில் பல்லாயிர வருடங்களுக்கு முன்னதாகவே உயர்தர நிலையைக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது வெளிப்படை. இது தமிழின் புராதனம் கால அளவு கடந்த தென்பதை அறிவிக்கின்றது.

இலக்கிய இலக்கணம், சமய நூல்கள், அரிய பொருள்களை யளித்தற்கேதுவாகிய சொற்கள் முதலியவையே ஒரு மொழியின் சிறப்பை எடுத்துக் காட்டுவதற்குப் பெருங்கருவி. அவ்வாறமைந்துள்ள மொழிகளுள் நமது தமிழ் மொழியே தலைமைபெறும்.

தொல்காப்பியர் "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத் தொடு புணர்ந்த சொல்லாகும்மே", "சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்" என்னும் சூத்திரங்களால் வடமொழி தமிழில் வழங்கும் ஒழுங்கை அறுதியிட்டுள்ளார். வடமொழி எல்லோருக்கும் பொது மொழி. மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்த பழைய கவிஞர்கள் வட மொழியிலுந் தேர்ந்தவரா யிருந்தமையால் தமிழில் வடசொற் கலப்பு சிறிது நேரலாயிற்று. நாளேற வேற இக் கலப்பு செவிக்கினிமை தருவதாயிருப்பதாகத் தோன்றியபடியாலும், தனித் தமிழ் இன்பம் கண்டு மகிழும் தலைவரின் தொகை

குறைந்து கொண்டே வந்தமையாலும், வடமொழி வல்லார் மனக் களிப் பெய்த, தமிழில் பாட்டு உரை முதலியவை செய்யவேண்டு மென்கிற ஆசை அதிகரித்து வந்தமையாலும் பொது சிறப்புக்களால் ஆகிய வடமொழிகள் அனேகம் தமிழில் கலந்துவரலாயின.

அன்றியும், தமிழ் மொழி வடமொழியினின்றும் உண்டாகவில்லை. திணை, பால் உணர்த்தும் வினை விகுதிகள் தமிழ் மொழிக்கிருத்தல் போன்று வடமொழிக்கில்லை. பால் வகுப்பு, நமது தமிழில் பொருள் நோக்கியும், வடமொழியில் சொல் நோக்கியும் இருக்கின்றது. ஆண் மகனைக் குறித்து வரும் வார்த்தைகளனைத்தும் ஆண் பாலாகவும் பெண்மகளைக் குறிப்பவை பெண்பாலாகவும் தமிழில் வழங்கும். இந்த வரையறை வடமொழியில் இல்லை.

"சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்குந் தமிழ்மொழிக்கும்
வேற்றுமை கூறிற் றிணைபா லுணர்த்தும் வினைவிகுதி
மாற்றருந் தெய்வ மொழிக்கில்லை பேர்க்கெழு வாயுருபும்
தேற்றிய லிங்கம் ஒரு மூன்று மில்லை செழுந்தமிழ்க்கே"

என்று பிரயோக விவேகம் இவ்விரு மொழிக்கு முள்ள வேறு பாட்டைக் காட்டுகின்றது.

மற்றும், "தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட்படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக் குறிப்பு, வினைத் தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற் பாகு பாடுகளும், அகம் புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதி களும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும், இன்னோ ரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமை யானும்" என்று இரு மொழியிலும் புலமை மிக்க மாதவச் சிவஞான முனிவர் கூறுவதால் தமிழ் தனி மொழியென்பது தெற்றனப் புலனும்.

இன்னும் தமிழின் இயற்கைச் சுவைநலம் பொருந்திய இறைய ஞரகப்பொருள், பத்துப்பாட்டு, அகம், புறம், கலித்தொகை, திருக் குறள், தேவாரம், திருவாசகம், நாலாயிரப்பிரபந்தம், சிலப்பதிகாரம், சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம், சிவஞானபோதம், சிவஞானசித்தி, திருமந்திரம் முதலிய நூல்கள் நமது தமிழ்மொழி யின் பெருமையை வெள்ளிடை மலைபோல் விளக்குகின்றன. இந் நூல்களில் ஈடுபட்டார் இதனை யறிவர்.

இன்னும், சிறிய மொழிகளால் பெரிய கருத்தைத் தாக்கூடிய எழுத்துச்செட்டும்,சுருக்கமான பதத்தொடர்களால் பெருக்கம் வாய்ந்த உட்கோள்களை அறிவிக்கும் சொற்செட்டும், மிகவுங் குறைவான மூச்சுச் செலவால் ஒருவர் மற்றொருவருடன் பேசக்கூடிய உயிர்ப்புச் செட்டும், ஆண்மை, காதல், மருட்சி என்னும் பண்புகள் மூன்றையும் அவற்றின் வெவ்வேறு கலவை யுணர்ச்சியுடன் சொற்பொருள் தேடாமல் எழுத்தின் ஓசையைக் கொண்டே அறிதற்குரிய இசைச் செட்டும் நமது செந்தமிழ்க் கிருப்பதுபோல ஏனைய மொழிகளுக்கில்லை என்பது அறிஞர் துணிபு.

பாடல்களின் இனிய முறையும் தமிழ் மொழிக்குச் செவ்வனே ஏற்பட்டிருக்கின்றது. சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் முதலிய அழகுகள் தமிழ்ப்பாடலுக்குண்டு. தெய்வீகம் வாய்ந்த கவிவாணர்கள் பலர் தமிழ் நலத்தை வெளிப்படுத்தி வந்தனர். புலவரும் ஆனையும் புரவலரால் ஆதரிக்கப்பட்டு வரவேண்டு மென்னும் நியதியின்படி சேர, சோழ, பாண்டியராகிய தமிழ் வேந்தர்களும், உதாரகுணம் வாய்ந்த தனவந்தர்களும் கவி வல்லோரைக் கனப்படுத்திப் பாடல் பெற்று வந்தனர்.

நூல்களின் மெய்ம்மைக் கருத்தைத் தமது நுண்ணறிவாற் கண்டு யாவரும் அதிசயமும் ஆனந்தமும் கொள்ளும்படி உரை எழுத வல்ல இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், பரிமேலழகர், அடியார்க்குநல்லார் முதலிய மேதாவியரின் மகத்துவம் அளவிடற் பாலதன்று. ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முதலிய சிறு நூல்களில் பெருங் கருத்தை யடக்கி வெளியிட்ட கவீச்சுரியாகிய ஔவைப் பெருமாட்டியின் ஒப்புயர்வற்ற திறமையை வியந்து பாராட்டாத தமிழபிமான முள்ள செல்வச் சீமான்கள் நமது நாட்டில் இருந்த துண்டோ? ஆதலினன்றே நமது நாடு புண்ணிய நாடென்னும் பெரும் பெயர் பூண்டது. இப்போது அம் மொழியிருக்கும் நிலைமையைச் சிறிது ஆராய்வாம்.

இவ்வகைச் சிறப்புக்களால் மற்ற உலக மொழிகளைத் தோல்வியுறச்செய்யும் வன்மையைப்பெற்று எல்லாப் பொருள்களுக்கும் நடுவாகிய இயற்கை உண்மைகளைத் தனது இலக்கணத்தின்கண் திருத்தமாக அமையக்கொண்டுள்ள நமது தாய்மொழியின் நிலை இக்காலத்தில் மிகப் பரிதபிக்கக்கூடிய விதமா யிருக்கின்றது. இதன் நலங் காணச் சிலர், வேற்றுமொழி சிறிது பயின்ற இறுமாப்பானும், நுண்

ஞுணர் வின்மையானும், "தமிழில் ஒரு சிறப்புமில்லை; அவ்வெற்று மொழியைக் கருநாடகப் புலவர் சிலரே கொண்டாடுகின்றனர்; அதில் என்னமோ எழுத்தாம், சொல்லாம், பொருளாம், யாப்பாம், அணியாம், அகத்திணையாம், புறத்திணையாம், புணர்ச்சியாம், விகாரமாம், சந்தியாம், எழுவாயாம், பயனிலையாம், செயப்படுபொருளாம், பெயரெச்சமாம், வினையெச்சமாம், வினைமுற்றாம், வியங்கோளாம், அளபெடையாம், போலியாம், அட அடா! எத்தனை இழவு; இந்த இழவெல்லாம் எதற்காக? இக்காலத்திற்குத் தகுதியாக எவருக்கும் தெரியும்படி எதையும் இலகுவான விதத்தில் எழுதாமல் கருநாடகக் கவிவாணர்கள் இவற்றையெல்லாம் கட்டிக்கொண்டழுகிறார்கள். இதுவன்றி, எப்பொழுதுபார்த்தாலும் தருமமென்றும், நீதியென்றும் எழுதி ஏட்டை நிரப்புகிறார்கள். இக்காலத்திற்கு இந்நீதியெல்லாம் பயன்படுமா? வாழையை வாலையென்று எழுதினாலென்ன? அது போனான் என்று எழுதினாலென்ன? எதுவும் நாம் வைத்துக் கொள்வதுதானே; நாம் இஷ்டம்போல் ஒரு சொல் நடையை ஏற்படுத்திக்கொண்டு இப்போது உலகத்தில் அனுபவமாக நடக்கும் விஷயங்களை எழுதிவரவேண்டும்," என்று தங்கள் இருண்மனத்தினெழுந்தவாறே எதையெதையோ பேசி, இனிய தமிழ்மொழியில் எழுத்துப்பிழை, சொற்பிழை, இலக்கணப்பிழை முதலியவற்றை நிரப்பி, சொற்களைப் பிரயோகிக்கும் முறை பிறழ, ஆட்டுக்குஞ்சு, கோழிக்குட்டி, நீரைத் தின்றான், சோற்றைப் பருகினான் என்பன போன்ற பிரயோகங்களைப் புகுத்தி நூல்களெனவும், வியாசங்களெனவும் பலவற்றை எழுதிப் பரப்பிவருகின்றனர். முறைப்படி கற்றாரையும் கல்லாரெனக் கழறி அவமதிக்கின்றனர்.

இக்கிளர்ச்சியால் தமிழ்நாடெங்கும் பிழைமிக்க தமிழே பெருகி வருகின்றது; உரை நடையும், செய்யுள் நடையும் சுருங்கி வருகின்றன. இச்சீர்கேடுகளைத் திருத்தி யமைக்க ஆங்காங்கே பல தமிழ்ச் சங்கங்கள் அரும்பாடுபட்டு உழைத்து வருகின்றன; தமிழறிந்த பல பெரியாரும் அரிய முயற்சி செய்து வருகின்றனர். எனினும், இக்குறைகள் நீங்கவில்லை. ஆதலின், தமிழ்மக்களாகிய நாம், நம் அன்னையாகிய தமிழ் மடந்தைக்கு, குறுகிய நோக்கமுள்ளார் சிலரால் நேரும் குறைகளை நீக்கிச் சீரும் சிறப்பும் செவ்விதிற் றழைத்தோங்கும் மார்க்கங்களைத் தேடவேண்டும்; பல தமிழ்ச்சங்கங்களை நிறுவவேண்டும்; மாணவர்களை முறைப்படி தமிழ்க்கல்வி பயிலுமாறு

புரியவேண்டும்; அச்சுப்பிரசுரங்கள் பிழையின்றி வெளிவரச் செய்தல் வேண்டும். இவற்றைச் செய்வோமாயின், நமது தமிழ்த்தழைக்கக்கூடும்; அன்றியும் நமது தமிழ்த்தாய்க்கு நாம் செய்ந்நன்றி மறவாதவர்களாவோம்; தமிழ்மக்களனைவருக்கும் தமது பாஷையில் ஊக்கம் அதிகரிக்கும்; தமிழ்நாடும் மேம்பாடடையும். தமிழ் மக்களாகிய நாம் நமது தாய்மொழியை ஆதரித்துச் சிறப்படைவோமாக. இறைவன் அருள்புரிக.

ஓம் தத் ஸத்.

# தேசநலப் பகுதி.

## லோகமான்ய பாலகங்காதர திலகர்

(108-ம் பக்கத் தொடர்ச்சி.)

### சிறை வாசம்.

சிவாஜி அரசரின் பரம்பரையில் பிறந்த கோல்ஹாபூர் மகாராஜாவை, அச் சமஸ்தானத்திலிருந்த "கார்பாரி" என்ற உத்தியோகஸ்தர் அவமானமாக நடத்தியதை "மராட்டா" "கேசரி" என்ற இரண்டு பத்திரிகைகளும் தைரியமாகக் கண்டித்து எழுதின. அதைப் பார்த்ததும் அச்சமஸ்தான "கார்பாரி" யாக இருந்த எம். டபிள்யூ. பார்வ் என்பவர் "மராட்டா" பத்திரிகையின் ஆசிரியராக இருந்த லோகமான்ய திலகரின்மீதும் "கேஸரி" பத்திரிகையின் ஆசிரியராக இருந்த அகர்க்கரின்மீதும் மான நஷ்டவழக்குத் தொடுத்தார். அந்த வழக்கில் லோகமான்ய திலகரும், அகர்க்கரும் நான்குமாதம் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டார்கள். இந்த மான நஷ்டவழக்கு நடைபெற்றகாலத்தில் பல அரும்பெருங் காரியங்களைச் செய்துவந்த ஸ்ரீமான் விஷ்ணுசாஸ்திரி இறந்துபோனார். அதனால் அவர்களுக்கு ஏற்பட்ட கஷ்டம் அளவிடக் கூடியதல்ல. திலகரும், அகர்க்கரும் சிறைவாச தண்டனையைச் சந்தோஷமாக ஏற்று அனுபவித்தனர். சிறைக்குச் சென்றதனால் அவ்விருவரின் கீர்த்தியும், செல்வாக்கும் நாட்டில் அதிகமாயின. நாட்டின் பல பாகங்களிலுள்ளவர்கள் இவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதற்கு முன் வந்தார்கள். சிறையில் இருந்துவந்த இவ்விரு தேசபக்தர்களுக்காக பூனாநகரில் ஒரு நாடகம் நடிக்கப்பட்டது. அதில் திலகருடன் ராஜீய விஷயங்களில் மாறுபட்ட கோபாலகிருஷ்ணகோகலே அவர்களும் ஒருவேடந்தாங்கி நடித்தார். மகாராஷ்டிரதேசத்தில் அவ்விருவருக்கும் இருந்துவந்த மதிப்பும், கௌரவமும் இக்காரியங்களிலிருந்து விளங்கவில்லையா?

விஷ்ணுசாஸ்திரி இறந்ததினால் லோகமான்ய திலகருக்கு இருந்துவந்த பொறுப்பும், காரியங்களும், அதிகமாகிவிட்டன. நாட்டின் நன்மைக்காக

தங்களது உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்த ஒரு சிறிய கூட்டத்திற்கு லோகமான்ய திலகர் தலைவராக விளங்கினர். பல காரியங்களி லும் ஸ்ரீமான் நாம் ஜோஷி, லோகமான்யருக்கு வலதுகண்போ விருந்து வேண்டிய உதவிகளைச் செய்துவந்தார்.

## போதகாசிரியர்.

1884-ம் ஆண்டில் பாலகங்காதரதிலகர், அகர்க்கர், நாம் ஜோஷி, ஆப்ட் ஆகிய இந்நால்வரும் சேர்ந்து "தக்ஷிண கல்விச் சங்கம்" என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தினர்கள். அச்சங்கத்தில் இந்த நான்கு பெரியார்களும் தங்கள் உயி ருள்ளவரையில் அதற்கு அங்கத்தினராக இருந்து உழைப்பதென்று முடிவு செய்துகொண்டனர். பிறகு அச்சங்கத்தில் ஸ்ரீமான்களான வி. பி. கெல்கார், டாராப், எம். எஸ். கோல், கோபாலகிருஷ்ண கோகலே, பானு, படங்கர், முதலியவர்களும் சேர்ந்துகொண்டனர். 1885-ம் ஆண்டில் தக்ஷிண கல்விச் சங்கத்தின் ஆதரவில் "பர்கூஸன் கலாசாலை" என்ற பெயருடன் ஒரு கல்லூரி ஸ்தாபிக்கப்பட்டது. தக்ஷிண கல்விச்சங்கத்தில் தங்களது உயிருள்ளவரை யில் அங்கத்தினர்களாக இருக்க உறுதிசெய்துகொண்டவர்கள் பர்கூஸன் கலாசாலையில் இருபதுவருஷம் போதகாசிரியர்களாக இருக்க ஒப்புக்கொண் டனர். இந்தக் கலாசாலை ஆரம்பிக்கப்பட்ட சில வருஷங்களுக்குள்ளேயே அதிக பிரபலமடைந்தது. கல்லூரியை அமைப்பதற்காகப் பல இடங்கள் வாங் கப்பட்டன. அந்தக் கல்லூரிக்குப் பம்பாய் அரசாங்கத்தாரும் சில உதவி களைச் செய்தனர்.

1890-ம் ஆண்டில் திலகருக்கும் அச்சங்கத்தி லிருந்துவந்த மற்றவர்களுக் கும் சில விஷயங்களில் அபிப்பிராயபேத மேற்பட்டதனுல் அவர் அச்சங்கத்தி லிருந்தும், கலாசாலையிலிருந்தும் விலகும்படி நேரிட்டது. அகர்க்கருக்கும் தில கருக்கும் ஜனசார சீர்திருத்த விஷயமாகவும், மத விஷயமாகவும் அபிப்பிராய பேதமேற்பட்டது. ஆகவே அகர்க்கர் "கேஸரி' பத்திரிகையின் ஆசிரியர் பதவியை விட்டுவிட்டு "சுதாரக்" என்ற பெயருடன் ஒரு பத்திரிகையை ஆரம்பித்து நடத்தி வந்தார்.

சித்திரகலாசாலை விஷ்ணுசாஸ்திரி உயிருடனிருக்கும்போதே அவருக் குச் சொந்தமாயிற்று. ஆரியபூஷணம் அச்சுக்கூடமும்,"கேஸரி" "மராட்டா" பத்திரிகைகளும் திலகர், கெல்கார், எச். என். கோகேல் இம் மூவருக்கும் சொந்தமாயின.

கணிதசாஸ்திரத்தில் பாலகங்காதர திலகர் சிறந்த மேதாவியாக விளங்கி ஞர். பர்கூஸன் கலாசாலையில் அவர் கணிதசாஸ்திர போதகாசிரியராகவே இருந்துவந்தார். ஆனுல் சில சமயங்களில் அவர் சம்ஸ்கிருத போதகாசிரிய ராகவும், பூதபௌதிக தத்துவசாஸ்திர போதகாசிரியராகவும் வேலை பார்த்து வந்தார். லோகமான்ய திலகரிடத்தில் கல்லூரி மாணவர்களுக்கு அன்பும், பக்தியும் அதிகமாக ஏற்பட்டன. கணிதசாஸ்திரத்தில் லோகமான்ய திலக

ருக்கு இணையாக வேறொருவரு மில்லையென்று சொல்லுவது வழக்கம். லோகமான்யதிலகர் கல்லூரியிலிருந்து விலகியதனால் கல்லூரிக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது என்றே சொல்லலாம்.

## பொதுஜன ஊழியம்.

லோகமான்யர் கல்லூரியிலிருந்தும், தக்ஷிண கல்விச் சங்கத்திலிருந்தும் விலகியபிறகு பொது ஜன விஷயங்களில் தலையிட்டு உழைக்க ஆரம்பித்தார். அக்காலத்தில் இராஜப்பிரதிநிதி சட்டசபையில் கொண்டுவரப்பட்ட "விவாக கால நிர்ணய மசோதாவை" தைரியமாகக் கண்டித்து அதற்கு விரோதமாகப் போராடினார். அதனால் பூனா நகரில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. அவருடைய எதிர்க் கட்சியினர் அவரை வாயில் வந்தபடியெல்லாம் தூற்றிப் பேசினார்கள். ஆனால் அவர் அவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல், அஞ்சா நெஞ்சினராய்த் தமது கொள்கையை நிலை நிறுத்தினார்.

பின்பு அவர், வக்கீல்களாக வேலைபார்க்க விரும்புகின்றவர்களுக்குச் சட்ட சம்பந்தமான நூல்களைப் போதித்து வந்தார். சட்டஞானத்தில் லோகமான்ய திலகருக்கு இருந்த அறிவு அளவிடக்கூடியதல்ல. "கேஸரி" "மராட்டா" என்ற இரண்டு பத்திரிகைகளையும் அவர் தாமே ஆசிரியராக இருந்து மிகவும் திறமையாக நடத்திவந்தார். "கேஸரி" "மராட்டா" என்ற இரண்டு பத்திரிகைகளும் அவருக்குச் சொந்தமாயின. "ஆரியபூஷணம்" அச்சுக்கூடத்திற்குக் கெல்காரும், எச். என். கோகேலும் சொந்தக்காரர்களாயினர்.

பத்திரிகைகளுக்கு எழுதுவதுடன் திலகர் தமது தொண்டை நிறுத்திக் கொள்ளவில்லை. பகவத்கீதையையும், ருக்வேதத்தையும் ஆராய்ச்சி செய்து வந்தார். இந்த இரண்டு நூல்களை ஆராய்ச்சி செய்வதில் அவருக்கு மிகுந்த விருப்பமுண்டு. லோகமான்யர் ருக்வேதத்தை நன்கு ஆராய்ச்சிசெய்து ஒரு சிறந்த வியாச மெழுதினார். 1892-ம் வருஷத்தில் லண்டன்மாநகரில் கூடிய கீழ்த்திசை நூலாராய்ச்சி சங்கத்தாருக்கு அவர் அதை அனுப்பினார். அடுத்த வருஷத்தில் அவர் அதைச் சீர்திருத்தி "வேதங்களின் தொன்மையைப்பற்றிய ஓர் ஆராய்ச்சி" என்ற பெயருடன் ஒரு நூலாக வெளியிட்டார். அந்த நூலைப் போற்றிப் புகழாத மேனாட்டு வடமொழி நிபுணர் ஒருவருமில்லை. மாக்ஸ் முல்லர், வெபர், ஜாகோபி, விட்னி, டாக்டர் புளூம்பீல்ட் முதலிய மேனாட்டு நிபுணர்கள் லோகமான்யரின் ஆராய்சித் திறமையைக் குறித்துப் பலவாறு புகழ்ந்து பேசியிருக்கின்றார்கள்.

1894-ம் வருஷத்தில் பரோடா சமஸ்தானத்தில் செட்டில்மெண்டு இலாக்காவிற்கு அதிகாரியாக இருந்த ஸ்ரீமான் பாபட்மீது ஒரு வழக்குக் கொண்டு வரப்பட்டது. ஸ்ரீமான் பாபட் லோகமான்யரின் சிறந்த நண்பர். ஆகவே லோகமான்யர் ஸ்ரீமான் பாபட்டிற்குத் துணையாகநின்று உழைத்தார். வழக்கு நடைபெற்றகாலத்தில் அவர் பேசியதைக்கண்டு நியாயாதிபதிகள் எல்லோரும் மிகுந்த வியப்படைந்தனர்.

(தொடரும்) திரு. கே. சுப்பிரமண்யம்.

## மானுஷீக ஐக்யம்.

அன்பர்களே!

தற்கால உலகத்தின்கண் நோக்குமிடத்துப் பல நிகழ்ச்சிகளையும், புது நாகரீக ஆசாரங்களையும், கொள்கைகளையும் உடைய பல மனித சமூகங்கள் "பத்திரிக்கைகள்" என்ற சாதனங்களினால் பொது ஜனங்களின் மனதைக் கலக்குகின்றன. அவரவர் சார்பில் உபன்யாசங்கள் மேடைஏறிப் புரிகின்றனர். ஐக்யமிருப்பதெங்கும் ஐயமே. ஐக்யத்தை அனுஷ்டானத்தில் கொண்டுள்ள மனிதர்களாகக் கருதும் மேல்நாட்டினரிடமாவது மானுஷீக ஐக்ய மிருக்கிறதா என்று நோக்குமிடத்து, தோலின் நிறபேதமும், செல்வத்தின் செருக்கும் உடையவர்களாலும், மிருகபலத்தின் இறுமாப்புடையவர்களாலும், மற்றவர்களிடமுள்ள, ஐக்யமத்யம் பின்னப்படுத்தப்படுகிறதென்பதை அறிகிறோமன்றோ?

தாய் நாடாம் பாரததேசத்து மனிதர்களிடம், "மனித சுபாவத்திற்குரிய அரும் பெரும் குணங்கள் நிறைந்து, அழியும் உலக இன்ப உணர்ச்சிகளை மறந்து, உத்தமசுகத்தை அடையவேண்டுவதொன்றையே கருத்தாகக்கொள்வதே பிறவிப்பயன்" என்ற உணர்ச்சி குறைந்துவிட்டதாலும், அவர் தாம் கற்கவேண்டியது உண்ணவும் உழைக்கவுமே என்று கருதுவதாலும், நம் உஷ்ணபூமிக்கு ஒவ்வாத ஆசாரம், உடை, உணவு, ஒழுக்கம், பாஷைகளை அவலம்பித்துப் பெரியோர்கள் இயற்றிய அறநூல்களை ஆராய்ச்சி செய்வதைக் குறைத்துக்கொள்வதாலும், உலக அமைதி நிலைக்க ஆன்றோர் ஆக்கிய நால் வகைத் தொழில்கள் தலைகீழாகமாறி மானுஷீக ஐக்யம் எங்கும் குன்றி வருகின்றது.

சனாதனதர்மங்களை அனுஷ்டித்துவந்த பாரதநாட்டிற்கும் தற்கால நவீன நாட்டிற்கும் பாரதூரவேற்றுமைகள், பல்வேறு ஜாதிகள் நாளாவட்டத்தில் உண்டானதாலும், பிறதேசத்தவர் குடியேறி ஆட்சிபுரிந்ததாலும் உண்டாகியிருக்கின்றன. அடிக்கடி ஒவ்வொரு கொள்கையும், மதம், சமூகமும் தோன்றித் தாய்நாட்டில் பல ஜாதிமதம் சமூகங்களை உற்பத்திசெய்துவிட்டிருக்கின்றன. இந்துதேசத்தில் சைவ, வைஷ்ணவம், மத்வம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம், வேதாந்தம், சித்தாந்தம் என்ற பல பிரிவுகள் உள. பௌத்தம், பாரசீயம், பிர்ம்மசமாஜம், ஆர்யசமாஜம், கிருஸ்துவம், இஸ்லாம் என்ற பிரிவுகளு முள்ளன. இவைகளில் ஒன்றுக்கொன்று முரண்பாடான கோட்பாடுகளும், ஆசாரங்களும், அனுஷ்டானங்களும் உள்ளன.

"எல்லா உலகிற் கிறைவனொருவன், எல்லா உடலும் இறைவன் ஆலயமே" என்ற உணர்ச்சியும் சர்வபூத தயையாகிய அஹிம்சையும், சத்யமார்க்கமும் அனைவருக்கும் உண்டாக எல்லோரும் இவற்றைக் கடைப்பிடித்தாலல்லது மானுஷீக ஐக்யம் நிலைப்பது முடியாது.

ஆன்மார்த்த ஞானத்தைத்தரும் கல்வியைக் கற்காதவர்களிடமும், கற்றறி மோழைகளிடமும் மேற்கண்ட கொள்கையை எதிர்பார்க்க முடியாது.

இன்னும் பிராம்மணர் என்ற ஒரு குலத்திலேயே சைவம், வைஷ்ணவம், வைஷ்ணவத்திலும் வடகலை தென்கலைச் சண்டை, தெலுங்கர், நியோகி, மாத்தவர் முதலிய பேதங்களாய் அவர்கள் ஒருவர்க்கொருவர் கொள்வினை உண்டியும் கொள்ளாது இருக்கின்றனர். வைதிகர் லௌகிகர் என்ற வித்தியாசமும் இல்லாமலில்லை. முதலியார் என்ற வகுப்பிலும் வேளாளர், செங்குந்தர், செட்டிமார், சேனைத்தலைவர் போன்ற பல பிரிவுகள் இருக்கின்றன. நாயுடு என்ற வகுப்பிலும், கவரை, வன்னியர் முதலிய பல பிரிவுகள் உள்ளன. இவர்கள் ஒருவர்க்கொருவர் சம்பந்தமின்றிப் பல வேற்றுமையான பழக்க வழக்கங்களைக்கொண்டுள்ளார்கள். சில சமயங்களில் இவர்கள் ஒருவர்க்கொருவர் சச்சரவிட்டு மதாசார மகாநாடுகூட்டிக் கிராமாந்திரங்களில் பேசும்போது இதைக் காணலாம்.

இவைகள் இருக்கும்வரை, எல்லோரும் ஒரு மனத்தினராக மானுஷீக ஐக்கியத்தைப் பெற முயற்சிசெய்பவர்களின் நோக்கம் முற்றுப்பெறுவது நம் ஆயுளில் இல்லை. இவைகளை ஒழித்து, தேசத்தில் சமத்வம், சமரஸமான மானுஷீகஐக்யம், அஹிம்சை முதலியவற்றை வளர்க்க உலகப் பெரியாராகிய மகாத்மா காந்தி அடிகள், "காந்தீயம்" என்ற தம் கொள்கைகளைப் பரப்பி தேசீய சபையின் ஆணையில் பாரதநாட்டின் பல மதஸ்தர்களையும், பல கட்சியினரையும், பல பிரிவினரையும் சூஸ்திரக்கயிற்றால் கட்டித் தம் ஆத்மசத்தியிலீடுபடச் செய்தார். அந்தோ! தாய்நாட்டின் நிர்ப்பாக்கிய தசையோ! கலியின் காலக் கூற்றோ! ஒவ்வோர் கயிறும் அறுப்பட்டு போகின்றன. ஆயினும் அவருடைய அருட்பெரும் ஆத்மபலத்திற்கு அனைத்தும் ஒருசமயம் ஒடுங்கவேண்டும். அந்தோ! "நாகபுரியின் இந்துமுஸ்ஸல்மீன் ஒற்றுமை" வங்கநாட்டில் மடிந்தது.; அஹிம்சாதர்மம் சௌர்சராவில் சீர் குலைந்தது. காங்கிரஸ்ஸின் பேரால் (உத்தியோகம்) சட்டசபையில் பிரவேசிக்கலாயிற்று. சீர்மிகு தேசீயவாதிகள் தேசீய மகாநாட்டிலிருந்து ஒருவர்பின் ஒருவராக விலகலாயினர். தீண்டாமையை யொழித்தல் என்ற கொள்கை கிராமாந்திரத்தில் நுழைவது அசாத்யமாயிருக்கிறது. அதோடு (26-8-26)ல் நிகழ்ந்த ஒரு சிறு சம்பவத்தில் மானுஷீக ஐக்யம் எவ்வாறு நிலைக்கும் என்று ஐயுறுகிறேன். அதாவது இவ்வூரில் தாலூக்கா போர்டார் ஜலவசதிக்காகப் பொதுக் கிணறு வெட்டியளித்திருக்கிறார்கள். அதில் ஜலத்தை யெடுத்து வருஷக்கணக்காக இந்துக்கள் உபயோகித்து வந்தனர். "ஸ்தலஸ்தாபனங்களின் உதவியால் நிருமிக்கப்பட்ட பொது இடங்கள், கிணறுகளை எல்லா மதஸ்தர்களும் ஜாதிவேற்றுமையின்றி உபயோகிக்கலாம்" என்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதன்படி அன்று ஆதிதிராவிடர் என்ற வகுப்பினரில் சிலர் அவர்கள் சேரி சமீபத்தில் பிரத்யேக குளமும் கிணறும் இருக்கும்போதே தங்களுடைய சுதந்திரத்தை நிலைப்படுத்தும்பொருட்டு இந்துக்களில் பெரும்பாலர் உபயோகித்த கிணற்றில் நீர் எடுத்தார்கள். அன்றையதினமே செருப்புத்தைக்கும் சக்கிலியர்களும் தோட்டிகளும் எடுத்தார்கள். உடனே ஆதிதிராவிடர் என்பவர்கள் நீர் எடுப்பதை நிறுத்திவிட்டு "சக்கிலிகள் எங்களிலும் தாழ்ந்தவர்கள்; அவர்கள் எடுத்த

நீரில் எடுப்பது ஆகாது; இந்துக்களின் தூண்டுதலால்தான் அவர்கள் ஜலம் எடுத்தனர்'' என்று போர்டுக்கு மனுசெய்துகொண்டிருக்கின்றனர். அந்தோ! மானுஷீக ஐக்யம் ஒருங்கே நிலவுவ தெங்ஙனம்? ஆசாரசீர்திருத்தக்காரர்கள் "எல்லோரும் ஒரே மேஜையில் உண்டு, ஒருவர்க்கொருவர் பெண் கொடுத்துப் பெண் வாங்குவது நலம்'' என்று திருத்தம் கொண்டுவந்தபோதிலும், நம்மவருள் தன்னலம், பொறாமை, மமத்வம் ஆகியவை ஒழிந்தாலன்றி நாட்டில் மானுஷீக ஐக்யம் ஏற்படாது. பரம்பொருள் பாரதநாட்டிற்கு நலம் நல்க அவரைப் பணிகிறோம்.

ஆசிரியர், நா. கிருஷ்ணசாமி அய்யர்,
ஜோலார்பேட்டை.

# அறநெறிப்பகுதி.

## ஆரிய சித்தாந்தம்

### பொதுத் தர்மம்.

(119-ம் பக்கத் தொடர்ச்சி.)

நித்தியவிதிமுதல் பிதிர்யக்ஞம் வரையில் கூறப்படாமல் விடுபட்டிருக்கும் தர்மங்களிற் சிலவற்றை மீண்டெழுதுகின்றோம். ஆதலாலிது பொது தர்மமென்று கூறப்பட்டது. விசேஷமாய் நான்கு வருணத்தாருக்கும் பொதுவான தர்மங்களையே கூறுகின்றோம். அவை பலவகையாம்.

ருக்வேதத்திற்குப் பிருகஸ்பதியும், யஜுர்வேதத்திற்குச் சுக்கிரனும், சாமவேதத்திற்குச் செவ்வாயும், அதர்வண வேதத்திற்குப் புதனும் அதிதேவதைகளாவார்கள். இவ்வேதக்காரர்கள் தத்தம் சாகாதிபர் கிழமைகளில் உபநயனம் செய்வது உத்தமம். இந்தக் கிரகங்கள் பலமுடையவர்களாய்க் கேந்திர கோணங்களிலிருக்கும்போது உபநயனம் செய்யவேண்டும். இலக்கினத்திற்கு நாலு, எழு, பத்து கேந்திர ஸ்தானங்களாம். இலக்கினத்திற்கு ஐந்து, ஒன்பது திரிகோண ஸ்தானங்களாம். இவைகளில் சாகாதிபர்களிருக்கும்போது உபநயனம் செய்தல் விசேஷம். குறித்த ஸ்தானங்கள் மேற்கண்ட கிரகங்களுக்குப் பகை நீசங்களாயின் சிறப்புடையனவாகா.

எப்போதும் கிருகஸ்தர்கள் மூன்று வஸ்திரங்களைத் தரித்திருத்தல்வேண்டும். மூன்றும் வஸ்திரமில்லாமலிருக்கக்கூடாதாகையால் அதற்குப் பதிலாக மூன்று பூணூல்களைத் தரிக்கவேண்டும். இவ்விரண்டுமில்லாமலிருந்தால் அவன் இழிந்த ஜாதியாய்விடுவான். பூணூலாக்கும் நூலை வேதப்பிராமணர்களே நூற்கவேண்டும். கன்னிகாபெண்களும், சமங்கலிகளும், விதவைகளும் நூற்கலாம். கிருகஸ்தனும் பிரமசாரியைப்போல அரைநாண் கட்டிக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் அவன் நிர்வாணியென்று கருதப்படுவான்.

பிராதக்காலத்தில் எழுந்திருக்கவேண்டும். எழுந்தவுடனே தெய்வ சொரூபங்களையாவது கண்ணாடியையாவது பார்க்கவேண்டும். சிவன், விஷ்ணு,

பிரமா, இந்திரன் முதலான திக்பாலகர்கள், சூரியசந்திராதி கிரகங்கள், சப்த ரிஷிகள், அஷ்டநாகங்கள், தர்மிஷ்டர்களான அரசர்கள், தன்குலப் பெரியோர்கள், தன் குலதெய்வம், இஷ்டதெய்வம், கங்கை முதலான புண்ய தீர்த்தங்கள் இவர்களைத் தியானிக்கவேண்டும். பிறகு ஆசமனம்செய்துவிட்டுப் போய் மலஜலவிசர்ஜனம் செய்து சௌசம் செய்துகொண்டு பல்லைத் துலக்க வேண்டும். குக்கிடாசனத்திலிருந்துகொண்டு அதாவது குந்தி உட்கார்ந்து கொண்டு, இரண்டு முழங்கால்களுக்கும் இடையில் கைகளை வைத்துக்கொண்டு ஆல், வேல், அத்தி, நாயுருவி, பூலா, வேம்பு, கருவேல் முதலிய பாலும் முள்ளு முள்ள மரங்களிலிருந்து எடுத்த குச்சிகளாலாவது, மாவிலை, கரிசலாங்கண்ணி முதலிய இலைகளினுலாவது, துவர்ப்புள்ள பொடிகளினுலாவது பல் துலக்க வேண்டும், பல் துலக்கும்போது மௌனமாகவே யிருக்கவேண்டும். பேசிக் கொண்டும், நாய், கழுதை முதலிய ஜந்துக்களையும், சண்டாளராதி யீன ஜனங்களையும் பார்த்துக்கொண்டும் பல் துலக்கக்கூடாது. பார்வையை மூக்கு நுனியிற் செலுத்தித் தெய்வ சிந்தனையுடன் பல் துலக்கவேண்டும். பின் வாய் கொப்பளித்து முகத்தைக் கழுவிக்கொள்ளவேண்டும்.

தினந்தோறும் கட்டாயம் ஸ்நானம் செய்யவேண்டும். கிருகஸ்தர்கள் சூரியனுதிக்கும் முன்பே ஸ்நானம்செய்துவிடவேண்டும். பிரமசாரி, சந்நியாசி, ஸ்திரீகள், விதவை இவர்கள் சூரியனுதித்தபிறகே ஸ்நானம் செய்யுவேண்டும். இதன் விரிவு நித்தியவிதியிற் கூறப்பட்டுள்ளது; ஆண்டுக்காண்க. ஓடுகிற நதியில் ஸ்நானம் செய்வது உத்தமம். நதிநதங்களில் ஸ்நானம் செய்யும்போது பிரவாகத்திற்கு எதிர்முகமாக நின்றுகொண்டு ஸ்நானம் செய்யவேண்டும். குளம், ஏரி, கிணறு முதலியவற்றில் ஸ்நானம் செய்வதாயிருந்தால் சூரியாபிமுகமாக நின்றுகொண்டு ஸ்நானம் செய்தல்வேண்டும். பிராமணர்களுக்கு ஸ்நானுங்கக் கிரியைகள் ஐந்துண்டு. அவை: ஸங்கல்பம், வருணவினுகத்ஜபம், மார்ஜனம், அகமர்ஷராஜபம், ஸ்நானுங்கத் தர்ப்பணம் என்பவைகள். பிரமசாரிகளும், சந்நியாசிகளும் சங்கல்பம் முதலிய செய்யாமலே ஸ்நானம் செய்ய வேண்டும். பிரமசாரிகள் காலைவேளையில்மட்டும் ஸ்நானம் செய்யவேண்டும். கிருகஸ்தர்கள் காலையிலும், மத்தியான்னிகவேளையிலுமாக இருமுறை ஸ்நானம் செய்யவேண்டும். சந்நியாசிகள் காலை, மத்தியான்னம், மாலை முப்போதும் ஸ்நானம் செய்யவேண்டும்.

தர்மத்துக்காகப் பிறரால் வெட்டப்பட்ட குளம், கிணறுகளில் ஸ்நானம் செய்யக்கூடாது. ஸ்நானம் செய்யும்படி நேரிட்டால் அவற்றிலிருந்து பத்துக் கை அல்லது ஐந்துகை மணலைவாரிக் கரையில்போட்டுப் பின் ஸ்நானஞ் செய்யலாம். கற்களையெடுத்து வெளியிலெறிந்துவிட்டும் ஸ்நானம் செய்யலாம். ஸ்நானம் பண்ணும்போது சித்தத்தைச் சுத்தமாக்கிக்கொள்ளவேண்டும். அசுத்த ஹ்ருதயத்துடன் ஸ்நானம் செய்வது பயனற்றதாம். ஸ்நானம் செய்தபின் தலைமயிரை உதறுதல் கூடாது. ஈர வஸ்திரத்தால் தலை துவட்டக்கூடாது. உலர்ந்த வஸ்திரத்தினுலேயே தலை துவட்டவேண்டும். உடம்

யையும் துடைத்துக்கொள்ளவேண்டும். பிறகு ஆசமனம் செய்துவிட்டு உலர்ந்த மடிவஸ்திரம் உடுக்கவேண்டும். ஆடவர்கள், சிவப்பு, பச்சை, நீலம், மஞ்சள் முதலிய நிறமுள்ள வஸ்திரங்களைத் தரித்தல் கூடாது. சுத்தமான வெள்ளை வஸ்திரம், வெண்பட்டு, நார்மடி இவைகளைத் தரிக்கலாம். வர்ண வஸ்திரங்கள் சுமங்கலிகளும், கன்னியா ஸ்திரீகளும் தரிப்பது சிலாக்கியம். விதவைகளுக்கு வெள்ளை வஸ்திரமே சிறப்புடையது. வெண்பட்டும் உடுக்கலாம். பிறர் வஸ்திரம், நனைக்காத வஸ்திரம், வண்ணானால் வெளுக்கப்பட்டு நனைக்கப்படாத வஸ்திரம், சண்டாளர் நெய்த வஸ்திரம் இவைகளை உடுக்கக் கூடாது. இவை எந்தக் கர்மங்களுக்கும் பயன்படா. ஆடு முதலியவற்றின் ரோமங்களால் நெய்த வஸ்திரம், தலைப்பில்லாத வஸ்திரம், கிழிந்துபோய்த் தைக்கப்பட்ட வஸ்திரம் இவைகளும் ஆகாவாம். கிழியாததும், தைக்கப்படாததும், வெண்மையானதும், தோய்த்துலர்த்தப்பட்டதுமான சுத்த வஸ்திரங்களையே தரிக்கவேண்டும். இடையில் வஸ்திரம் தரித்துக்கொண்டு மேலே அங்கவஸ்திரமில்லாமலிருக்கக்கூடாது. அங்கவஸ்திரமும் தரித்துக்கொண்டே ஜபாதிகளைச் செய்யவேண்டும். (தொடரும்)

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

## சரீராரோக்கியப்பகுதி.

### தேகப்பயிற்சி.

"அஞ்ஞானத்தினால் நாம் பிணியால் வருந்துகிறோம்; விஞ்ஞானத்தினால் அதினின்றும் தப்பித்துக் கொள்ளுகிறோம்," என்பது மேல் நாட்டுப் பழமொழிகளில் ஒன்று. நம் சரீரத்தைக் காப்பாற்றவேண்டுவது நம்கடமை; அப்படிக்கின்றி ஏராளமாகக் கண்டதை எல்லாம் புசித்தும், புசித்த ஆகாரங்கள் ஜீரணமாவதற்கு அத்யாவசியமான தேகப்பயிற்சி செய்யாமலும், சுத்தமான ஆகாயத்தைச் சுவாசிக்காமலும் இருப்பதால், நாம் பலவித வியாதிகளாலும் துன்பப்படுகிறோம். "நோயற்றவாழ்வே குறையற்ற செல்வம்" என்பது ஒரு முதுமொழி. நாம் சுக தேகிகளாக விருக்கவேண்டுமானால், பிணி யணுகாதிருக்க வேண்டுமானால், சந்தோஷமா யிருக்கவேண்டுமானால் தினந்தோறும் தேகப்பயிற்சி செய்யவேண்டும். தேகப்பயிற்சி, தேகத்தையும், அறிவிற் கிருப்பிடமாகிய மூளையையும் பலப்படுத்துகிறது; வியாதிகளைப் பறக்கச்செய்கிறது; துணிபு, பொறுமை, ஆண்மை, ஆவல், ஆனந்தம், காரியசித்தி, நீண்ட ஆயுள் முதலியவைகளை அளிக்கின்றது; பயங்காளித்தனம், முறுமுறுப்பு, தைரியவீனம், பொறாமை முதலியவைகளை நீக்குகிறது. இவ்வளவு நன்மையும் ஒருவன் இத்தேகப் பயிற்சியால் அடையக்கூடும் என்பது ஆன்றோர்களின் நம்பிக்கை. இதை யுணர்ந்தே, மேல்நாட்டார்கள், "போஜனமில்

லாமல் பல நாட்களிருக்கலாம்; தேகப்பயிற்சியின்றி ஒரு நாளேனு மிருக்க லாகா' தென, அதைவிடாமல் யாவரும் செய்துவருகிறார்கள். அதற்கு மாறாக நம் நாட்டவர்கள் அதை முற்றிலும் வெறுக்கிறார்கள். இதனாலேயே நம் நாட்டில் பிறப்பைவிட இறப்பு அதிகமாக விருக்கிறது. ஒரு வாலிபன் பல வீனத்தால் இறந்துவிட்டானாகில், "அவனுக்கு ஆயுள் அவ்வளவுதான்; விதியை வெல்லல் முடியுமோ?" என்பதையே பலரும் சொல்வார்கள்; நம்மவர் கட்கு விதியில் அவ்வளவு நம்பிக்கை.

மனிதன் வயது எவ்வளவு? மூன்று பிள்ளைகள் ஓரிடத்தில் தங்கள் பம் பரங்களைச் சுற்றுகிறார்கள். ஒருவனுடைய பம்பரம், சிறு கல்லொன்றில் தாக்கிச் சுற்றாமல் விழுந்து விட்டது; மற்றொன்று புழுதி மண்ணில் விழவே, சுமார் 30-விநாடிகள் சுற்றியபின் விழுந்துவிட்டது; மூன்றாவது பம்பரம் சமதரையில் விழுந்து ஒரு நிமிஷத்திற்குமேல் சுற்றிற்று. ஒரு பம்பரம் எவ்வளவுநேரம் சுற்றக்கூடுமெனச் சொல்ல முடியாது. அது நாம் எவ்வளவு வேகமாகச் சுற்றுகிறோமோ, அவ்வளவுநேரம் சுற்றும். அதுபோல் நாம் நம் தேகத்தை எப்படிப் பலப்படுத்துகின்றோமோ, அதற்கேற்றவாறே யிருக்கும் நம் ஆயுளும். நம் நாட்டில், ஒருகாலத்தில், (சுமார் 200 - வருடங்கட்குமுன்) 120 - முதல் 170 - வயதுவரை மனிதர்கள் உயிருடனிருந்திருப்பதாகத் தெரிகிறது. இப்பொழுதும் மிகச் சிலர் இருக்கிறார்கள். ஆனால் தற்சமயம் 30 - அல்லது 35 - வயதிற்கெல்லாம் நம்மவர் இறப்பதற்குக் காரணம் என்ன? **தேகப் பயிற்சி யில்லாமையும், தேகத்தைக் கவனியாததுமே காரணம்.**

ஐரோப்பாவில் சுமார் 300 வருடங்கட்கு முன் மனித ஆயுள் சராசரியாகப் பார்த்ததில் 20 வயதாக விருந்தது; 1910-ம் ஆண்டில் 40 வயதாகி விட்டது. அமெரிக்காவில் மசாசுசெட்ஸ் **(Massachusettes)** நகரில் 45 வயதும், சுவீடனில் **(Sweden)** 52 வயதுமாக விருக்கிறது. நியுயார்க் **(NewYork)** பட்டணத்தில் 1866 வருஷம் முதல் 12 வயது கூட்டப் பட்டது. ஜெர்மனியில் மகா ஐரோப்பிய யுத்தத்திற்கு முன், மனித ஆயுள் 3 மாதத்திற்கு ஒன்றாகக் கூடிக்கொண்டு வந்தது. தற்சமயம் நம் இந்தியாவில் 24 வயதாக விருக்கிறது! ஒரு காலத்தில் நல்ல பலாட்டியர்களையும், வீரர்களையும், பராக்கிரம சாலிகளையும், கற்பும், வைராக்கியமும், வனப்புமுடைய மங்கையர்களையும் உடைத்தாயிருந்த நம் நாடு, இத்தகைய க்ஷீணதிசையை அடையவேண்டிய காரணம்யாது? தேகப்பயிற்சி யின்மையே யாகும்!

மரம், புல், பூண்டு, செடிமுதலியவைகள்கூட காற்றினால் அசைக்கப் பட்டாலன்றிச் சரியாக வேரூன்றமாட்டா; உபயோகியாது வைத்திருக்கும் சாமான்கள் துருப்பிடித்துக் கெட்டுப்போவதுபோல், தேகப்பயிற்சி செய்யாத நம் சரீரத்தின் அவயவங்களும் சிறுத்துப் பலவீனமடையும். நம் வீட்டின் சில பாகங்கள் இடிந்து நம்தலையில் விழும்வரை காத்திருந்து, அதன்பின் அதைப் பழுதுபார்ப்பதா நம் கடமை? நம் வீட்டைச் சுத்தமாகவும் பலமாகவும் வைத்துக்கொள்ள வேண்டியது நம் கடமையல்லவா? அதுபோல சீவன்

வசிப்பதற்கெனக் கடவுளால் நமக்களிக்கப்பட்ட இவ்வருமையான வீட்டை நிராகரித்தல் நீதியா ? நாம் குடியிருக்கும் வீடு சுத்தமில்லாமலும், பலமின்றியும், நல்ல காற்று உலாவக்கூடாததாயும், அசுத்தங்கள் போவதற்கான சாக்கடைகள் கெட்டுப்போயுமிருந்தால், அவ்வீட்டைவிட்டு வேறிடத்திற்குப் போவோமல்லவா ? அதுவேபோல நம்முடைய ஜீவன் வசிப்பதற்கு வீடாகிய தேகத்திற்கும் இவ்வித சங்கடங்கள் நேர்ந்தால், அதுவும் வேறிடம் செல்லும் என்பது திண்ணம். ஆதலால் தேகப்பயிற்சியை, ஆண், பெண், விருத்தர், வாலிபர், சிறுவர், சிறுமி, முதலிய யாவரும் செய்ய முன்வரவேண்டும்.

து. குமாரசாமி. மைடான், டில்லி.

## விவசாயப்பகுதி.

### பயிர்த்தொழிற் குறைவுக்குக் காரணம்.

ஆவணிமாத சஞ்சிகையில் ஒரு நண்பர் தற்காலத்தில் யாவரும் கல்வி பயின்று சேவகாவிர்த்தியில் மனதைச் செலுத்துவதினால் பயிர்த்தொழில் (விவசாயம்) கேவலநிலைமை யடைந்துவிட்டதென எழுதியுள்ளார். ஆனால் பயிர்த்தொழிலானது யாவற்றிலும் மேலானதென்பதும், சகலருடைய ஜீவாதாரத் தொழிலென்பதும் யாவருக்கும் தெரிந்திருந்தும் அதைவிடுத்து சேவகாவிர்த்திக்கும் வெளியூர்களுக்குச்சென்று கூலிவேலைசெய்து வயிறு வளர்க்கவும் நம்மி லனேகர் போவதற்குக் காரணம் என்னவென்பதை ஆராய்வாம். நம்தேச பயிர்த்தொழிலுக்கு முக்கியமானவை சலம், மாடு, எரு முதலானவைகளே. இவற்றில் முதல் ஜலம் தங்குவதற்கு ஏற்பட்டுள்ள ஏரிகள் ஆறுகள் கணவாய்களாகியவைகளை முற்காலராஜாக்கள் வெகுவாய் உண்டாக்கியதாகத் தெரிகின்றது. தற்கால நாகரீக ராஜாங்கத்தால் புதிதாய் அகால மழைக் கேற்றவாறும் பிரஜைகளின் விருத்திக்கேற்றவாறும் ஆனநலங்கள் ஒன்றும் செய்யப்படுவதாய்த் தெரியவில்லை. மற்றும் பழைய ஏரிகளை ரிப்பேர் பார்க்கக்கூட சாத்தியமில்லாதிருப்பதைக் கவனிக்கலாம். திருஷ்டாந்தமாக வடஆற்காடு ஜில்லாவில் காவேரிபாக்கம் என்றஏரி சுமார் 5-மைல் விஸ்தீரணமுள்ளது. அது இதுவரையில் 16-அடிவரை மண்கொண்டு தூர்ந்துவிட்டதாய்க் கவர்ன்மெண்டார் கணக்கெடுத்திருக்கின்றார்கள். அதனிடத்துள்ள மண்ணை எடுக்க சாத்தியப்படாமல் விட்டிருக்கின்றார்கள். இந்த நிலையில் இன்னும் சில வருஷங்கள் சென்றால் ஏரி மேடிட்டு நன்செய் நிலங்களெல்லாம் புன்செய்களாய் மாறுவதில் என்னதடை? தவிரவும், தற்காலத்தில் ஏரிகளின் நிலை இப்படியிருக்க, அகால வருஷத்தினால் பயிர்கள் சரியாய் விளையாமல் சாவியாயும் பதராயும் போவதுடன் அங்கும் இங்குமாக நெல் விளைகின்றது. அதற்கு வரி !வஜா கிடையா. குடிகள் மனு செய்தால் உத்தியோகஸ்தர்கள்

ஜமாபந்தியில் பார்ப்பதாய்ச் சொல்லுகின்றார்கள். இதற்குள் குடிகள் சாவியை அறுத்து மாடுகளுக்கு வைக்கோல் கட்டிவைத்து விடுகிறார்கள். பிறகு ராஜாங்கத்தார்வந்து பார்வையிட்டு, தாள் உரப்பாய் இருப்பதாயும், ரெவினியூ இன்ஸ்பெக்டரும் கணக்கப்பிள்ளையும் எழுதியிருப்பதைப் பார்க்க ஒரு அணு பலிதம் இரண்டு அணு பலிதம் ஆகும் என்றும், வஜாகிடையாதென்றும் சொல்லிவிடுகின்றார்கள். பயிரிடுபவர்கள் சரீரகஷ்டம், விதைநஷ்டம், மாட்டுச்செலவு முதலான நஷ்டம் ஆகியவற்றுடன் வாய்தாவும் தண்டமாய்க் கட்டவேண்டி வருவதால் அவர்களின் நிலைமை பரிதாபத்திற்கிடமாயிருக்கிறது. நிற்க, பயிரிடுவதில் முக்கியமாய் ராஜாங்கத்தார் செய்யவேண்டியவைகளும் பயிரிடுபவர்கள் கவனிக்கவேண்டிய விதிகளும் பல இருக்கின்றன. அவற்றுள் முக்கியமான சிலவற்றைச் சுருக்கிச் சொல்லுகிறேன். அவையாவன: ஜெர்மன் முதலிய தேசங்களில் பயிர்த்தொழில் முக்கிய தொழிலென்று ராஜாங்கத்தாரால் கவனிக்கப்படுவதாய்த் தெரிகின்றது. எப்படியெனில் பயிர்த்தொழிலுக்கு மண்ணுக்குத் தகுந்தபடி எருக்களைத் தயார்செய்வதற்கும், விளையாத நிலங்களின் தோஷங்களைக் கண்டுபிடித்து அவற்றிற்குத் தக்க பரிகாரம் செய்வதற்கும், பயிர்செய்யுங்காலத்தில் நெல் அதிகரிப்பதற்கும், பழவர்க்கங்கள் அதிகரிப்பதற்கும், புஷ்பவகைகள் அதிகரிப்பதற்கும் உரியவழிகளை இராஜாங்கத்தார் குடிகளுக்கு இலவசமாகக் கற்றுக்கொடுத்தும், தோஷபரிகாரங்கள் செய்தும் வருகிறார்கள். அப்படி இருப்பதால் அத்தேசங்கள் குறைந்த நிலத்தில் அளவு கடந்த தானியாதிகளை உற்பத்திசெய்ய ஏதுவாகின்றது. அத்தேசத்தின் விவசாயத்தைப்பற்றி 1912-வருஷம் கிளினிகல் பேபரில், எழுதியிருந்ததாவது:—

“ஒரு ஏக்கர் நிலத்தில் ஒரு குடும்பத்தார் மாதம் 1-க்கு 100-பவுன் சம்பாத்தியம் செய்து சுகமாய் ஜீவிக்கின்றார்கள்; அந்த வரும்படி குறைந்தால் ராஜாங்கத்துக்குத் தெரிவிப்பார்கள்; அவர்கள் அக்குறைவுக்குக் காரணமாகிய தோஷங்களைக் கண்டுபிடித்து அவற்றிற்குச் சிகிச்சை செய்வார்கள்” என்பதே.

இரண்டாவது குடிகளுக்குப் பயிர் வேலையில் நஷ்ட மேற்படுவது இந்தியாவில் மாட்டினாலேயே. எப்படியெனில் மாடானது சதாகாலமும் ஆகாரத்தை மேய்ந்தால்தான் அதன் வயிறு நிறையும். அத்தகைய ஜந்துவை, குடிகள் காலையில் 5-மணிக்கு ஏரில் கட்டிவிடுகின்றார்கள். 11-மணிவரையில் உழுதுவிட்டபிறகு அதற்குக் கொஞ்சம் வைக்கோல் போட்டுத் தண்ணீர் காட்டி விடுகின்றார்கள். மறுபடியும் அதனை மாலை 3-மணிக்குக் கட்டிக்கொண்டு 6-மணிவரையில் வேலைவாங்கிவிட்டு இரவில் வைக்கோல் போட்டுக் கட்டிவிடுகின்றார்கள். அம்மாடானது காலையிலிருந்து வேலை செய்ததால் அலுத்துக் கொஞ்சநேரம் வைக்கோலைத் தின்றுவிட்டு அசதியாய்ப் படுத்து விடுகின்றது. அதனால் வயிறு நிறைய ஆகாரம் எடுத்துக்கொள்ள முடியாமல் ¼-வயிறு ஆகாரத்தோடு நாள்தோறும் வேலை செய்யவேண்டியதாகிறது. இக்காரணத்தால் ஒருபோகம் பயிர் செய்வதற்குள் மாடு இளைத்து எலும்பும் தோலுமாய் விடுகிறது. அதனால் குடிகள் இருநூறு ரூபாய்க்கு வாங்கும்

மாட்டை 30-அல்லது 40-ரூபாய்க்கு விற்றுவிட்டு மறுபடியும் 200-ரூபாய்க்கு வேறு மாடு பிடிக்கவேண்டி யிருக்கிறது. கால் நடைகளைக் கொன்று தின்னுவதினால் ஏற்படும் நஷ்டத்தைவிட மேற்சொல்லியவைகளினால் கால் நடை நஷ்டம் அதிகமாகின்றது. இக்காரணத்தால் மாடுகள் நாசமடைவது மன்றிப் பயிரிடுபவர்களும் கடன்காரர்களாகிவிடுகின்றார்கள். அன்றியும் பலஹீனமுள்ள மாடுகளால் உழுவதால் ஆழமாக உழமுடியாமல் மேல்வாரியாக உழுது பயிர் செய்கிறார்கள். அதனால் நன்றாய்ப் பயிர் வளர்கின்றதில்லை. "உழவின் பகை எருவில் தீராது" என்றபடி உழவு குறைந்தநிலம் எவ்வளவு எருவிட்டாலும் நற்பய னளிப்பதில்லை. அன்றியும் மண்ணில் குறைந்துள்ள சத்து இன்னதெனத் தெரியாமல் குடிகள் நிலங்களில் கண்மூடித்தனமாய் சாம்பல் எருவைக் கொட்டிவிடுவதாலும் பயிர் தக்க பலன் தராமல் போய்விடுகின்றது. இதில் மாட்டால் குடிகளுக்கு நஷ்ட மேற்படாமலும், நிலத்தை ஆழமாக உழவும், மாட்டை நல்ல ஸ்திதியிலும் நாள்பட உழைக்கக்கூடியதாகவும் வைத்துக் கொள்ளவும்வேண்டுமானால், குடிகள் என்னசெய்யவேண்டுமெனில், தற்காலம் போடும்மாதிரி வைக்கோலை மாட்டுக்குப் போடாமல் மிஷின்களினால் சிறுகக் கோதுமைப்பொட்டைப்போல் தூளாகக் கத்திரித்துப் பஞ்சுபேல்களைப்போல் கட்டிவைத்துக்கொண்டு, மனிதர்கள் ஆகாரத்தை உட்கொள்ளுவதுபோல் காலை உச்சி மாலை ஆகிய நேரங்களில் சிறிது சலத்துடன் கலந்து கொடுத்து வந்தால் அது வயிறு நிறைய ¼-மணிக்குள் தின்றுவிடும். அவ்வாகாரம் வயிற்றில் சென்றவுடன் பின்னு லருந்தும் சலத்தால் வயிற்றிலுள்ள மிஷினு லமுத்தப்பட்டு உப்பி சுமார் 4-மணிவரையில் அது பலமாய் வேலைசெய்ய அதற்கு பலத்தைக் கொடுக்கின்றது. தவிரவும் இவ்வாறு செய்வதன் மூலம், இரவில் மாட்டண்டை போடும் வைக்கோல்களை அயர்ந்துள்ள மாடானது தின்ன முடியாமல் காலால் தள்ளி அதன்மேல் படுத்துக்கொண்டு சலமலம் கழித்துத் தள்ளிவிடுவதால் வைக்கோலு நஷ்டம் ஏற்படுவதும், வைக்கோலைப் போர் போட்டு மழை வெய்யில் முதலியவைகளால் அதற்கு ஏற்படும் மக்கல், காய்தல் முதலான கெடுதிகளு மில்லாமற்போம்; இன்னும் வைக்கோல் அதிக இடத்தை அடைப்பதுமிராது; அக்கினி முதலானவைகளால் ஏற்படும் அபாயங்களுக்கும் இடமிராது. மேலும் பெரிய போர்களைச் சிறிய பேல்களாக்குவதால் எப்பிரதேசங்களுக்கும் ரயிலில் அனுப்பவும், பத்திரப்படுத்தவும், மாடுகளுக்கு இரைப்பஞ்சம் ஏற்படாமல் அவற்றைக் காப்பாற்றவும் ஏதுவுண்டாகும். இவ்வாறு பலவகையிலும் சௌகரியம் ஏற்படுத்திக்கொள்ளக்கூடிய மார்க்கத்தைக் குடிகள் கடைப்பிடிக்கவேண்டுவது அவசியம். இதுதவிர, நிலமானது ராஜாங்கத்தார்களுடைய சொந்த நிலமாகையால், ஒரு வீட்டுக்காரன் குடிக்கூலிக்கு விடும் வீட்டை, குடிக்கூலி கொடுப்பவனை எதிர்பாராமல் அதிலேற்படும் ரிப்பேர் முதலான சகல மராமத்துகளையும் பார்த்து எப்படி நல்ல நிலைமையில் வைத்துக்கொள்ளுவானோ அப்படி கிஸ்தியாகிய குடிக்கூலியைப் பெற்றுக்கொள்ளும் சொந்தக்காரர்களாகிய ராஜாங்கத்தார் மேல் சொல்லிய சீர்திருத்தங்களைக் கவனித்துச் செய்தல் வேண்டும். அவ்வாறு

செய்யும் பட்சத்தில் பிற நாடுகளைவிட நம் நாடு விவசாயத்தில் செழித்தோங்கும். அவ்வாறு செழித்துப் பயிர்த் தொழிலில் லாபம் கிடைத்தால் சகலரும் பயிர்த்தொழிலையே நாடுவார்கள். பயிர்த்தொழில் அதிகரித்தபோது வெளியூர்களுக்கு எவ்வளவு விளைபொருள்கள் ஏற்றுமதி செய்தாலும் நமக்கு நஷ்டமேற்படாது. மே. மாசிலாமணி முதலியார், டாக்டர்.

# சுயமொழிப்பகுதி.

## வியாச மெழுதுதல்.

**கசடறக்** கற்ற புலவர்க்கு இன்றியமையாத கடனாவது, தாங்கற்ற பொருளைத் தம் மாணாக்கர்க்கும் ஏனையோர்க்கும் முறைபிறழாது அறிவுறுத்தலாம். அவ்வாறு அறிவுறுத்தலுக்கு இரண்டு வழிகள் உள. அவையாவன:—உரைத்தல், எழுதுதல் என்பனவாம்; உரைத்தலாவது, தாங்கற்ற நூற் பொருளை ஐயமின்றி மாணாக்கர் முதலியோர்க்கு உரைத்தலாம். அவ்வாறு உரைப்பதால் பிறரால் உரைக்கப்படாத நுண்ணிய கருத்துக்களுந் தம்மனத்து எழுதல் கூடும். எழுதுதலாவது, தாங்கற்ற நூற்பொருளை ஏட்டில் தீட்டுதலாம். அங்ஙனம் தீட்டுதலால் தமது கல்வியறிவு விரிவடைவ தன்றித் தஞ்சொற்கள் எக்காலத்தும் பொன்னேபோற் போற்றப்படும். வாய்மொழி அவ்வக்காலத்து மட்டும் நின்று பின்னர் சிறுகச்சிறுக அழியுந் தன்மைத்து. ஏட்டில் தீட்டிய கருத்துக்கள் அவ்வாறு அழியா. எஞ்ஞான்றும் யாவரானும் நன்கு போற்றப்படும். புலவர்கள் தமது கருத்தை வியாசங்களாலும், பெருநூல்களாலும் விளக்கிக் காட்டுவர். பெருநூல்கள் பல பொருள்களைத் தம்மகத்தே கொண்டு விளங்கும். வியாசங்கள் ஒரே விஷயத்தைப் பற்றிய அருங்கருத்துக்களைத் தம்மகத்தேகொண்டு நிலவும்.

பெருநூல்கள் எழுதத் தொடங்குவதன் முன்னர் சிறுவியாசங்கள் எழுதிப்பழகுதல் சாலப்பயன் தருவதாகும். அல்லாக்கால், ஒரேவகைப்பட்ட கருத்துக்களைக் கோத்து முறைப்பட நூல் இயற்றல் இயலாதாய் முடியும். வியாசமெழுதுவதற்கும் மிகுந்த பழக்கம் வேண்டும். வியாசமெழுதப் பயிலுவோர் இடையறாது பல சான்றோருடைய கட்டுரைகளை வாசித்துவரல் வேண்டும். சிறிதுநாள் அவ்வாறுபயிலின், வியாசத்தின் வடிவு இன்னதெனப் புலப்படும். பின்னர், பிறவியாசங்களைப் பயிலாவிடினும் இனிய கட்டுரைகள் எழுதுதற்கேற்ற வன்மை உண்டாம். ஆயினும், பெரும்புலவருடைய கட்டுரைகளை இடையறாது போதுள்ள போதெல்லாம் வாசித்துப்பழகல் மிகவும் நன்றே. இடையறாது வியாசங்கள் எழுதிக்கொண்டிருப்பதும் வியாசமெழுதுவதில் தேர்ச்சியடைதற் குரியவழியாம். முதன் முதல் எழுதப்படும் வியாசம் சொற்சுவை பொருட்சுவை இன்றியும் வியாசவடிவம் தோன்றாது தொடர்

பின்றியுந் தோன்றல் கூடும். எனினும், அதனல் மனச்சோர்வடையாது மேன்மேலும் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருத்தல் வேண்டும். இவ்வாறு நாடோறும் பழகிடின் சின்ஞண் முயற்சியிஞலே பத்திரிகைகளிற் பிரசுரிக்கத் தகுந்த ஓர் வியாசம் எழுதும் வன்மைபெறல் கூடும். முன்னர் எழுதிய வியாசங்களையும் காப்பாற்றிக் கோடல் வேண்டும். இன்றேல், பின்னர் எழுதிய வியாசங்களையும் முன்னைய வியாசங்களையும் ஒப்பிட்டுப்பார்த்து வேற்றுமைகாண்டல் இயலாதுபோம். முதல் முதல் வியாசங்கள் எழுதும்போழ்து கற்றுரை உடன்வைத்து எழுதுதல் சாலச்சிறந்தது. அதற்கியலாதாயின், எழுதப்பட்ட வியாசங்களைக் கற்ருரிடத்துக் காட்டல் வேண்டும். அவரால் திருத்தப்பட்ட முறைகளைத் தழுவி வியாசங்கள் எழுதிப்பயிலல் வேண்டும்.

வியாசங்களை விரைவில் எழுதிமுடிக்கலாகாது. விரையுந்தோறும் அரும்பொருள்கள் உள்ளத்தே மறையும். வியாசம் உட்டுளை யுடையது போற்ருேன்றும். சொற்செறிவு சிறிதும் தென்படாது. ஆதலால், “**உரைக்கப்படும் பொருள் உள்ளத்தமைத்து**” என்றதற் கிணங்க, வியாசம் எழுதத் தொடங்குமுன்னர் இன்னின்ன விஷயங்களை எழுதுதல் வேண்டுமென முன்னரே மனத்தில் முறைப்படப் பதியவைத்துக் கொண்டு பின்னர் அவற்றை விரையாது எழுதுதல் வேண்டும். அங்ஙனம் எழுதும் போழ்தும் முற்பட எழுதும் கருத்துக்களும் சொற்களும் ஞாபகமாக விருத்தல் வேண்டும். இன்றேல், “**கூறியது கூறல்**” என்னும் குற்றத்திற் கிடனுண்டாம். “**குன்றக்கூறல்**” முதலாக வெடுத்துக் கூறப்பட்ட பத்துவகைக் குற்றங்களையும் நூலிற்போல வியாசங்களிலும் நீக்கியே எழுதுதல் வேண்டும். அவ்விலக்கண நெறியறிந்து எழுதாக்கால் வியாசவடிவு தோன்ருதாகிக் கெடும்.

சிலர் வியாசமெழுதுதலின் கண் மிகவும் இடர்ப்படுகின்றனர். ஆழ்ந்த கருத்துக்கள் அவர்கட்குத் தோன்றுவதில்லை. சில கருத்துக்கள் தோன்றினும், அவற்றை அமைத்து எழுதுதற்குரிய சொற்களுந் தொடர்களுந் தோன்றுவதில்லை. அதனல், அவர்க்குச் சிறுவியாச மெழுதுதலின் கண்ணும் நீண்டகாலம் பிடிக்கிறது. சிலர், தாம் எழுதிய வியாசத்தைப் பலகாலும் புதுப்பிக்கின்றனர். இங்ஙனம் புதுப்பித்தல் நன்றெனினும் அவ்வாறு பழகுதல் நன்றன்று. ஓர் வியாசம் எழுதுவதன் முன்னர் தாம் எழுதக்கருதிய விஷயத்தைப் பற்றி நன்ருய் ஆராய்வதனல் ஆழ்ந்தகருத்துக்கள் தோன்றும். பின்னர், அக்கருத்துக்களை முறைப்படவைத்து வியாசமெழுதுதல்வேண்டும். பொய்யில் புலவருடைய கட்டுரைக் கருத்துக்களை மனதில் அழியாது வைத்துக்காப்பாற்றுவதனுலும் நுண்ணிய கருத்துக்க ளமைந்த வியாசங்கள் எழுதுதல் கூடும். சொற்சுவை பல் இலக்கிய நூல்களை வாசித்தலினல் உளதாம். இலக்கிய நூல்களையும், கட்டுரைகளையும் பயிலும் போழ்து அவற்றிற் காணப்படும் நுண்ணிய கருத்துக்களையும் இனிய சொற்களையும் பின்னர் எடுத்து ஆளுதல் வேண்டும் என்னுங் கருத்தோடு மனதில் நன்ருய்ப் பதியவைத்துக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு பதியவைத்த கருத்துக்களும் சொற்களும்

தொடர்களும் பின்னர் வியாசமெழுதும்போழ்து தாமே மனதிற்றோன்றும். இங்ஙனமன்றிச் சொற்களை எழுதி உருவேற்றலும் பிறர் கருத்தை அவ்வப்போது தேடி எடுத்துக்கொள்ளுதலும் நல்ல முறையல்ல. முன்னரே உளத்தமைத்த கருத்துக்களைவைத்து எழுதும் போழ்து அவற்றோடொத்த பிற கருத்துக்களும் தோன்றல் கூடும். அக்கருத்துக்களை ஒவ்வுமிடத்து அமைத்துக் கொள்ளுதல் நன்று. பின்னர்த்தோன்றுங் கருத்துக்கள் முன்னர் வைக்கத் தகுந்தனவாயின் அவற்றை அவ்விடத்துச் சேர்த்துக்கோடல் வேண்டும். இன்றியமையாத தல்லவாயின் நீக்கலும் பிழையன்று. கருத்துக்களை முறைப்படவைத்தலே முதன்மையாகக் கருதுதல் வேண்டும். (தொடரும்)

ராமசுப்பிரமணிய நாவலர், பத்திரிகாசிரியர், விசால ஹிருதயம்.

# மாணவர் பகுதி.

## ஆத்திசூடி உதாரணக்கதைகள்.

(81-ம் பக்கத் தொடர்ச்சி.)

### " அழகலாதன செயேல் "

"அழகு அல்லாதன—அழகில்லாதனவாகிய செயல்களை (அதாவது இழிவான செய்கைகளை), செய்யேல் — (நீ) செய்யாதே" என்பது இதன்பொருள்.

மனிதராய்ப் பிறந்தோர் எப்பொழுதும், எந்நிலையிலும் புகழ்ச்சிக்குரிய காரியங்களையே செய்துவரவேண்டும். அங்ஙனம் செய்துவருவதனால் அவர்க்கு இவ்வுலகத்திற் புகழும் மேலுலகத் தின்பமும் கிடைக்கும். இழிவான காரியங்களைச் செய்வோர் இம்மையில் அபகீர்த்தியையும், மறுமையில் நரகதுன்பத்தையும் அடைவர். இவற்றை அடியில்வரும் கதைவிளக்கும்:—

ஒரு நகரத்தில், வழிவழியாகச் சிறப்புடன் நிலைபெற்றுவந்த பெரிய குடும்பத்தில் பிறந்த வரதையா என்ற ஒருவர் செல்வத்துடன் வாழ்ந்து வந்தார். அவர் மிகுந்த பணக்காரரா யிருந்தபடியால் பலரும் அவரிடத்தில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். அந்த நம்பிக்கையால் அந்நகரத்திலுள்ள ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஆபரணம், பணம் முதலியவற்றை அவரிடம் பாதுகாப்புக்காகக் கொடுத்துவைத்திருந்து மீண்டும் வாங்கிக்கொள்வது வழக்கம். இத்தகைய உயர்விலிருந்த அவருக்குக் கெட்டகாலம் கிட்டிவிட்டது. அதனால் அவருடைய செல்வமுற்றுங் குறைந்துபோயிற்று. அவரிடத்தே மிக்க வறுமை உண்டாயிற்று. வறுமைத் துன்பத்தை அவர் பொறுக்க முடியாதவராயினர். உணவு கிடைக்காமல் உள்ளங் கலங்கினர். பழைய நண்பர்களிடம் ஏதாவது பெற்றுக் குடும்பகாரியத்தை நடத்தும் வழக்கத்தை மேற்கொண்டார்.

இவ்வாறு அவர் குடும்பம் நடத்தி வரும்போது ஒரு செல்வவந்தர் அவருக்கு மிக்க உதவிபுரிந்து வந்தார். அதனால் அவர், அத்தனவந்தரிடம் தினந்தோறும் போய் வார்த்தையாடிக்கொண்டிருந்து செலவுக்குப் பணம் வாங்கிக்கொண்டு வருவார்; ஒருநாளாவது அவருடைய வீட்டில் இல்லாமலிருக்கமாட்டார். வரதையா என்பவர் முன் பணக்காரராய்க் கௌரவம் பெற்றிருந்ததை உத்தேசித்து, தனவந்தர் அவர்மீது மிக்க நம்பிக்கை யுடையவராய் அவர் இருக்குமிடத்தில் எதையும் நம்பி வைத்துவிட்டுப் போகும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கும்போது ஒருநாள், வரதையா வந்து அத்தனவந்தருடன் பேசிக்கொண்டிருந்தார். அப்போது அத்தனவந்தர், தம்முடைய விரலில் அணிந்திருந்த உயர்ந்த வைரமோதிரத்தைக் கழற்றித் தாமிருந்த இடத்தில் வைத்துவிட்டு எண்ணெய்தேய்த்து ஸ்நானம் பண்ணப் போனார். அவ்விடத்தில் வரதையா ஒருவர் மாத்திரமிருந்தார். அப்போது அவருக்கிருந்த வறுமையால் பல விபரீத எண்ணங்க ளுதித்தன. அவர், "நாம் தினந்தோறும் இந்த வீட்டுக்காரரிடம் கெஞ்சிப் பிச்சை வாங்குவதைக்காட்டிலும் இந்த மோதிரத்தை அபகரித்துக்கொண்டு போய்விட்டால் விற்று அதிகப் பணம் வாங்கிப் பலதினங்கள்வரை கஷ்டமின்றிக் காலந்தள்ளலாம்; நாம் இதைத் திருடிவிட்டாலும் பிரபு நம்மீது சந்தேகங்கொள்ளமாட்டார்; நாம் கௌரவத் திருட்டாகத் திருடிவிட்டு, இங்குள்ள வேலைக்காரர்களுள் ஒருவன் தலைமீது அக் களவைச் சுமத்திவிடலாம்" என்று ஒரு தீர்மானஞ் செய்தார். அவருடைய தீர்மானத்திற் கனுகூலமாக மெய்யன் என்ற வேலைக்கார னொருவன் அந்த அறைக்குள் பன்முறை வந்து போய்க்கொண்டிருந்தான். அவர், 'சரி; இவன் அடிக்கடி இங்கே வருவதால் நாம் திருட்டுக்குற்றத்தை இவன் தலைமீது சுமத்த ஹேதுவுண்டாய்விட்டது; இனிக் கூசாமல் இக்களவை நடத்தலாம்' என்று துணிந்து விரைவாக அம்மோதிரத்தை எடுத்து மடியில் வைத்துக்கொண்டார். யாரேனும் திடீரென்று வந்துவிடுவார்கள் என்ற அச்சம் அவருக்குண்டானபடியால், அதை வேறிடத்தில் மறைத்துவைக்கவேண்டுமென்னும் துணிவு ஏற்படவில்லை. நெஞ்சு படபடவென் றடித்துக்கொண்டிருந்தது.

பெரியவர் இவ்வாறு மனக்கலக்கத்துடன் பூனைபோல் விழித்துக்கொண்டிருக்கும்போது பிரபு தலை முழுகிவிட்டுத் திரும்பிவந்து மோதிரம் காணப்படாம லிருக்கவே, திடுக்கிட்டு, "இங்கே யிருந்த மோதிர மெங்கே?" என்று வரதையாவின் முகத்தைப் பார்த்தார். ஆனால், அவர்மீது சந்தேகங்கொள்ளவில்லை. அவர், "ஐயோ! நான் இவ்விடத்திலேயே தான் இருக்கிறேன்; அஃதெப்படிப் போய்விடும்! மெய்யன்தான் அடிக்கடி வந்துகொண்டிருந்தான்; அவன் செய்த வேலைதான் இது" என்று அவன் தலைமீது பேரிடியை வீழ்த்தினார். மெய்யனோ மகாசத்தியவந்தன்; நெடுங்காலமாக நம்பிக்கையுடன் அப்பிரபுவிடம் வேலைக்கிருப்பவன். அப்படியிருந்தும், வரதையா செய்த சூழ்ச்சி

யால் அவனே திருடி யிருப்பானென்று பிரபு நம்பிவிட்டார். உடனே கோபத்துடன் மெய்யனைக் கூப்பிட்டு, "அடே! இதுவரை எனக்கு உன்மீதிருந்த நம்பிக்கையை நீ கெடுத்துவிட்டாய்; பேசாமல் மோதிரத்தைக் கொடுத்துவிடு" என்றார். மெய்யன் மனம்பதறி, "இதென்ன பெரிய அனியாயமாயிருக்கிறது! நான் மோதிரத்தைக் கண்ணாற்கூடப் பார்க்கவில்லையே" என்று கதறினன். அங்கே பலரும் வந்து கூடிவிட்டார்கள். அப்போது வஞ்சகமுள்ள வரதையா, மிக்க நாணயமுடையவர்போல் கோபித்தெழுந்து மெய்யனுக்கு முன்னேநின்று, "மெய்யா! நீ பொய்யனுகிவிடாதே; நானிருக்கும்போதே அதை யெடுத்துவிட்டு இப்படிச் சாதிக்கிருயே; உள்ளதைச் சொல்லாவிட்டால் நானே உன்னை உதைப்பேன்" என்று கையை ஓங்கி ஓங்கி நிமிர்ந்து பேசினர்.

ஐயோ! அவருடைய இந்திரஜாலம் அப்பொழுதே வெளியாய்விட்டது. அவர் கையை நீட்டி நீட்டிப் பேசினவுடனே அவர் மடி தளர்ச்சியா யிருந்தபடியால் மோதிரம் நழுவிப் பொத்தென்று கீழே வீழ்ந்தது. எல்லோரும், "இவர் மகாயோக்கியர்! பூரண சிலாக்கியர்! மோதிரத்தைத் தாமே பதுக்கிவிட்டு மெய்யனைப் பொய்யனுக்கப் பார்த்தாரே!" என்று கைகொட்டிச் சிரித்தார்கள். வரதையா வெட்கத்தால் தலை குனிந்துவிட்டார். பிரபுவுக்கு அவர் மீது அளவில்லாத வெறுப்புண்டாய்விட்டது. அவர் வரதையாவை நோக்கி, 'உமக்கு நான் தினந்தோறும் சகாயம் செய்துகொண்டு வந்தும் அதை மறந்து நீர் எனக்குத் துரோகம் செய்ய நினைத்தீரே; உமக்குக் கடவுள் துணை செய்வாரா" என்று கூறினர். அன்றுமுதல் வரதையாவின் பிழைப்புக்கெட்டது. பலரும் அவரை நிந்தித்தார்கள்; மறுமையிலும் அவர் சுகம்பெறவில்லை.

(தொடரும்) **செம்பூர்-வீ. ஆறுமுகச் சேர்வை.**

---

## "நல்லுரைத்திரட்டு."

(35-ம் பக்கத் தொடர்ச்சி.)

(101) "நம்பிக்கை"யே நலந்தரும். (102) "உழுதொழிற்"கு மேலாய தொழில் மன்பதையில் வேறு எதுவுமேயில்லை. (103) தெரியாது செய்யும் பாவங்கட்கு மன்னிப்புண்டு; தெரிந்து செய்யும் பாவங்கட்கு மன்னிப்பில்லையென்பது கூறுமலே விளங்கும். (104) கரத்தில் கத்தி, துப்பாக்கி, தடி ஆகியவைகளைத் தாங்கித் திரிவோன் "வீர"னுகான். (105) ஒருவர் பெரிய—அழகிய பெயரைக் கொண்டதனுலேயே நாம் மயங்கிவிடக்கூடாது. (106) ஒருவர் "புலால்" உண்ணுததாலேயே மேலானவராய்விடார்; அவருடைய "எண்ண"மும் அப்படியே யிருத்தல்வேண்டும். (107) "நல்லன" கீழ்மகன் என்று கூறப்படுவோனிடத்திலிருப்பினும் அதைக் கடைப்பிடிக்க வேண்டுவது அறிஞர் கடன். (108) எதையும் ஆண்டவன் வடிவாக நோக்கின் இப்பூவில் வெறுக்கத்தக்கது ஒன்றுமில்லை. (109) பெண்ணைவெறுப்போர் பெரியோராகார்.

(110)பிறர் நலம் விழையும் எவரும் இம்மன்பதையை விடுத்துக்காட்டுக்கேகார். (111) அன்பு வளர்ச்சிக்கு இல்லறத்தை ஏற்று, "உயிர்"களை ஈன்று, அவர்கள் துன்பத்தை யகற்றி இம்மை மறுமைப் பயன்களையடைய முயலும் ஒருவனே, இறைவன் நோக்கத்தை நிறைவேற்றும் அடியவனாகிறான். (112) உயர்ந்த வேதாந்தத்தையும், மேலான துறவறத்தையும் பேசும் மகன், தாய் தந்தையர் உதவியின்றித் தான் எவ்விடத்தினின்று முளைத்தான் என்பதை ஆராய்வானாக. (113) உலகில் "ஆன்மநேய"த்தையும், "சகோதர உரிமை"யையும் "அமைதி"யையும் நிலைநிறுத்தவல்லது "சமய"மேயாம். (114) "தாய்நாட்"டின்பொருட்டு எல்லாவற்றையும் "தியாகம்" செய்தல் மிக மிக மேலானதாகும். (115) நாடோறும் கோவிலுக்குச் சென்று வருவதாலேயே "பக்த"னாகான். (116) "ஆன்மஞானம்" விளங்கப்பெற்ற ஒருவன் எல்லாப் பொருள்களிடத்தும் ஆண்டவனைக் காணுகிறான். (117) நகர வாழ்வினும் நாட்டு வாழ்வே சிறந்ததாகும். (118) "சந்தேகம்" என்பது மாபெரும் பிசாசு; அதை விலக்குவோர் என்றும் இன்பத்தை யடையலாம். (119) பெண்கட்கு முதற்கடவுள் கணவனேயாகும். (120) காலத்திற் கியைய நடப்போர் "அறிஞர்". (121) தன்னைத் தானாள்வதே சரியான "சுயாட்சி"யாகும். (122) "துறவி" தனக்கென வாழ்வதால் கடவுள் கட்டளைக்கு மாறுபட்டவனாகிறான்; எனவே, அவன் யாங்ஙனம் உயர்ந்தோனாதல் கூடும்? பிறர்க்கெனவாழும் பெரியோன் எவனோ அவனே உயர்ந்தோனாகும்; எனவே, துறவறம் இல்லறத்தினுள்ளிருப்பது கூர்ந்து நோக்கின் புலப்படும்; ஆகவே, "இல்லறத்"தை விட "நல்லறம்" இம்மன்பதையில் எதுவுமேயின்று. (123) "சிற்றின்ப"மே "பேரின்ப"மென்பது எமது தாழ்மையான அபிப்பிராயம்; என்னை? "பேரின்பம்" தன்னலத்தின்பாற்பட்டதாகும்; "சிற்றின்பம்" என்றும் பிறர்நலத்தின்பாற்பட்டுள்ளது கண்கூடு; ஏனெனில் சில உயிர்களின் துன்ப நீக்கத்திற்கும், "இன்ப" ஆக்கத்திற்கும் துணைபுரிவதாலென்க. (124) வெளி ஆடம்பரங்களைக்கொண்டே ஒருவருடைய "குணம்" "நடத்தை" ஆதியவற்றை முடிவு செய்துவிடக்கூடாது. (125) "பிரயாணம்" செய்வதால், "அறிவு" "ஆரோக்கியம்" "அனுபவம்" ஆகியவை உண்டாவதாய் மேனாட்டார் கூறுகின்றனர். (126) அபிப்பிராய வேற்றுமையால் கலகம் விளைத்தல் அறிஞர் செயலாகாது. (127) ஒழுக்கமே ஒருவனை உயர்ந்தோனாக்கும். (128) பெற்றோர்க்கு அறிவுடைய மக்கட்பேற்றை விட சிறந்தது வேறு எதுவுமில்லை. (129) பெற்றோர் குணத்தை, அவர்களின் பிள்ளைகளாலறியலாம். (130) அருணோதயத்தில் உலவல் தேகசுகத்திற்கும், பிறநலங்கட்கும் ஏதுவானது. (131) சொல்வதினும் செய்து காட்டுதல் அறிவுடைமையாகும். (132) "புகழ்" பொருளைவிட உயரியது. (133) உனக்குப் பிறர்செய்ய விழைகிறவாறே, நீ அவர்களுக்குச் செய்வாயாக. (134) உண்மையான நண்பர் கிடைக்கப்பெறுவது மிக துர்லபம்; கிடைக்கப்பெற்றோர் "பாக்கியசாலி"கள். (தொடரும்.)

திரு. வி. மு. பொன்னையா.

# ஞானப் பகுதி.

## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

### முன்னுரை,

**பு**ருஷர்களால் விரும்பப்படுங் காரணத்தால் புருஷார்த்த மெனப்படும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினுள் முக்கிய புருஷார்த்தமா யிருப்பது சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்திவடிவ வீடேயாகும்; அதாவது மோக்ஷமே. மோக்ஷமானது ஆத்மஞான மொன்றனுனே அடையப்படுவதன்றிப் பிறவற்றுனெய்தப் படுவதன்றும். இதுபற்றியே தாயுமானவரும், 'ஞானமலது கதிகூடுமோ' என்றார். சரியை, கிரியை, யோகம் என்னும் இம் மூன்றும் முறையே அரும்பு, மலர், காய் போல ஞானமாகிய கனியை அடைதற்குரிய சாதனங்களேயாம். அத்தகைய ஆத்மஞானத்தை யடையும் நெறிகளையுணர்த்தும் நூல்கள் பல. அவற்றுள் ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் வடமொழியில் அருளிச்செய்த பல கிரந்தங்களுள் ஒன்றாகிய சர்வவேதாந்த சித்தாந்த சாரசங்கிரக மென்னும், இக்கிரந்தமானது மந்தாதிகாரிகளும் எளிதில் உணர்ந்து நற்பயனடையுமாறு, வேதாந்த சித்தாந்தத்தின் சாரங்களை யெல்லாம் திரட்டிச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் புகட்டுவதா யிருத்தலின் தமிழுலகிற்குப் பெரிதும் பயன்படுமெனக் கருதி எளியவசன நடையில் இதை எழுதத் துணிந்தேன். இதனை ஊக்கத்துடன் வாசிக்கும் அன்பர்கள், வேதாந்த சம்பந்தமான முக்கியாமிசங்களை யெல்லாம் எளிதில் உணர்ந்து கொள்வதோடு, இதைவிடப் பெரியவையாகவுள்ள வேதாந்த நூல்களை வாசித்துப் பொருளறியும் ஆற்றலையும் அடைவரென்பது திண்ணம். மூலகிரந்தத்தில் இதற்கு 'சர்வவேதாந்த சித்தாந்த சாரசங்கிரக' மெனப் பெயரிடப்பட்டிருப்பினும், நீட்சிநோக்கி வேதாந்த சாரசங்கிரகமெனப் பெயரிட்டுள்ளேன். நூலில் கூறப்படாத சில விஷயங்கள் அவசியத்தை நோக்கி ( ) இவ்வித பிறைக்குறிக்குள் மேற்கோள்களோடு காட்டப்பட் டிருக்கின்றன.

இராணிப்பேட்டை ஸ்ரீ அச்சுதாநந்த ஆச்சிரமத்தில் பிரம்மநிஷ்டராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் சின்மயானந்த சுவாமிகளாகிய எனது ஞானசிரியரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு இதனையியற்றலாயினேன். இத்தொழிலில் என்னை ஊக்கிய எங்கும்நின்று எவற்றையும் இயக்கும் சர்வசக்தி, இஃது இனிது முடியுமாறும் அருள்புரிவதாக. பிழையுளதேல் உலகம் பொறுக்க.

### மங்கலம்.

சீரார் கயமுகத்துச் செம்மலைநற் செவ்வேளைத்
தாராருஞ் சங்கரனைச் சக்கிரியைக்—காரார்
மலைமான் கலைமான் மலர்மா னிவரைப்
புலையார் பிறப்பொழியப் போற்று.

அயனரி யரனென வாம்பரம் பொருளே
பயனிது வெனவெனப் பண்புடன் றரச்சின்
மயனென மானிட வடிவுட னுண்டான்
தயவுள வவனடி தலைமிசை யணிவாம். (2)

சங்கரனே சங்கரனு யவதரித்துச்
சதுமறையின் முடிப்பொருளைச் சகத்தோர்க்காகப்
பங்கமறப் பலநூலாப் பகர்ந்திட் டானல்
பகரவற்றுள் சர்வவேதாந் தச்சித் தாந்தச்
சங்கிரக மென்னுமொரு நூலியாவும்
சங்கையற விளக்குமது தான்கண் டன்னன்
பங்கயத்தா ணினைந்ததனைக் கத்தி யத்தாற்
பகர்கின்றேன் றமிழதினும் பரிசி னனே. (3)

## நூல்.

[மங்களாசரணமாக சங்கராசாரிய சுவாமிகளால் இயற்றப்பட்ட சுலோகங்களின் பொருளை மொழிபெயர்ப்பது அவசியமாகத் தோன்றவில்லையாகலின் அவைவிடப்பட்டன.]

### அநுபந்த சதுஷ்டயம்.

(ஒவ்வொரு நூலிலும் ஆரம்பத்தில் அநுபந்த மிருத்தல் அத்தியாவசியமாகும் † 'வீடு நாலுகால்களின்றி நில்லாததுபோல, சகல கிரந்தங்களும் நான்கு அநுபந்தங்களின்றி இரா'. ஏனெனில் நூலிற்கும் அதை வாசிப்போருக்கும் சம்பந்தத்தை யுண்டாக்குவது அநுபந்தமேயாகும். நூலை முற்றிலும் வாசிக்கவேண்டு மென்னும் விருப்பம் அநுபந்தத்தை வாசிப்பவர்களுக்கு உண்டாகும். இக்காரணத்தால் அது அநுபந்தம் எனப்படுகிறது. அது நான்கு பிரிவாயிருத்தலால் அநுபந்த சதுஷ்டயம் என்பர்.) இது நூலோடு சேர்ந்ததல்ல. ஆயினும் நூலைத்தொடங்குவதற்குக் காரணமா யிருத்தலால் நூலோடு சேர்ந்ததாகவே கருதப்படும்.

(இந்நூலை வாசிக்கத்தகுந்த அதிகாரி யார்? இதில் கூறியுள்ள விஷயம் யாது? அந்த விஷயத்திற்கும் நூலிற்குமுள்ள சம்பந்தம் யாது? அந்த விஷயத்தை அறிவதால் அதிகாரிக்கு உண்டாம் பயன் என்ன? என்னும் சங்கை கிரந்தாரம்பத்தில் உண்டாகும். ஆதலால் இந்நான்கையும் முதலில் நிரூபித்தல் அத்தியாவசியமாம். இவற்றை நிரூபித்துக் காட்டாவிட்டால் கிரந்தாரம்பமே யுண்டாகாது.) ஆகையால் சாஸ்திராரம்பத்தைப் பயனுகவுடைய அநுபந்தசதுஷ்டயம் அறியத்தக்கதாம்.

(அதிகாரி, விஷயம், சம்பந்தம், பிரயோசனம் என்னும் நான்கு அநுபந்தங்களும் இங்கு நிரூபிக்கப் படுகின்றன.)

---

† விசாரசாகர டிப்பணி.

**அதிகாரி:**—நித்தியா நித்தியவஸ்து விவேகம், இகமுத்திரார்த்த பலபோக விராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு வகைப்பட்ட சாதனங்களையும் நன்கடைந் துள்ளவனுயும், புத்திசாலி யாயும், யுக்தியுள்ளவனுயும், கல்வியறி வுள்ளவனுயுமுள்ள புருஷனே இந்த வேதாந்த கிரந்தத்தை வாசிக்கத்தகுந்த அதிகாரியாவான்.

(நான்கு சாதனங்களை யடையாமல் புத்தியுக்தி கல்விகளைமட்டும் உடையவர் வேதாந்த கிரந்தத்தை வாசித்தால் அதில் கூறப்படும் விஷயங்களை நன் ஞுணரவும் பிறர்க்கெடுத்துக் கூறவும் வல்லமை பெறுவார்களாயினும், முக்கிய மயனுகிய முத்தியை யடையாராதலின், முத்தியையடைய விரும்புவோர் மேற்கூறிய நித்தியா நித்திய வஸ்துவிவேகம் முதலாகிய நால்வகைச் சாதனங் களையும் (சாதனசதுஷ்டயம்) அடைந்தே தீரவேண்டும். இச்சாதன சதுஷ் டயங்களின் அத்தியாவசியம் மேலே கூறப்படும். ஆதலின் ஈண்டு விரிக்கப் படவில்லை.)

**விஷயம்:**—நூலில் சொல்லப்படுவது எதுவோ அது விஷயம் எனப்படும். எல்லா வேத வாக்கியங்களும் எந்த ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத் தைக் கூறுகின்றனவோ, அந்த ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியமே இந் நூலிலும் கூறப்படுகின்றது. ஆதலால் ஜீவப்பிரஹ்ம ஐக்கியரூபமான நிர்க்குணப் பிரம்மமே இந்நூலிற்கு விஷயமாம்.

**சம்பந்தம்:**—ஜீவப்பிரஹ்மைக்கிய மென்னும் விஷயத்திற்கும் அந்த விஷயத் தைக்கூறும் வேதாந்த ரூபமான பிரமாணத்திற்கும் (**போத்ய போதக பாவசம்பந்த** முள்ளதெனப் பெரியோர் கூறுவர்.

(நூலில் கூறப்படும் விஷயம் போத்யம்; அவ்விஷயத்தைக் கூறும் நூல் போதகம். அதாவது இந்நூலால் அறிந்துகொள்ளக் கிடக்கும்விஷயம் ஜீவப் பிரம்மைக்கியம்; இது போத்யம். அந்த விஷயத்தை அநேக பிரமாணங்களு டன் போதிப்பது இந்தநூல்; இது போதகம். ஆதலால் விஷயத்திற்கும் நூலிற்குமுள்ள சம்பந்தம் போத்யபோதக பாவசம்பந்தம். இது **பிரதிபாத்தியப் பிரதிபாதக** பாவசம்பந்த மெனவும் படும். நூல் பிரதிபாதகம். அது போதிக்கும் விஷயம் பிரதிபாத்தியம். அதாவது விஷயத்தைச் சொல்வது எதுவோ அது (நூல்) பிரதிபாதகம். நூலில் சொல்லப்படுவது எதுவோ அது (விஷயம்) பிரதிபாத்தியம்.)

**பிரயோஜனம்:**—எந்த ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானத்திஞல் ஜீவன் துக்கவடிவ சம்சார பந்தத்தினின்றும் அப்பொழுதே விடுதலையடைகின்றுனே அந்த ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்னும் ஞானமே இந்தநூலின் பிரயோசனமாம். மந்தபுத்தி யுள்ளவனும் பலனைவிரும்பாமல் ஒரு காரியத்தில் பிரவேசிப்பதில்லை. ஆதலால் நூலில் பிரவிருத்தி யுண்டாவதற்கு அதன் பிரயோசனத்தை யறிதலே காரணமா யிருத்தலின் பிரயோசனம் அவசியம் அறியத்தக்கதாம். (தொடரும்.)

**பூ. ஸ்ரீநிவாசன்**, தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

## கைத்தொழிற்பகுதி.

### காலபேதங் காட்டுங் கருவி.

கற்பூரம் 94-தானிய எடை; சுமார் நூற்றுக்குத் தொண்ணூறுபங்கு உள்ள சாராயம் (ஆல்கஹால்) 47-தானிய எடை; வடிகட்டின தண்ணீர் 422-தானிய எடை இவைகளை ஒன்றாகக் கரைக்கவும். வடிகட்டிப் பிறகு 1-செண்ட்டிமீட்டர் அகலமும், 25-ஸெண்ட்டிமீட்டர் நீளமுமுள்ள ஒரு கண்ணாடிக் குழாயில் ஊற்றி நிரப்பி, கார்க்கு (Cork) போட்டடைத்துப் பின் அரக்கினால் (Wax) மூடவேண்டும். இதைச் சுவரில் தொங்கவிடுவதற்குச் சௌகரியமாக ஒரு மரச்சட்டத்தி லமைத்தல் அவசியமானது.

கவனிப்பு:—(1) கண்ணாடிக்குழாயில் திரவம் சுத்தமாகத் தென்பட்டால் 'நல்ல காற்று (அடிக்கும்) வீசும்' என்றும்; (2) அடிப்பாகத்தில் துளிகளாகத் தோன்றினால் 'கனத்தகாற்றும் மாரிக்காலத்தில் உறைபனியு முண்டாம்' என்றும்; (3) திரவம் மங்கலாயிருந்தால் 'மழை' என்றும், (4) துளிகளினால் மங்கலான திரவமாயிருந்தால் 'சப்தமுள்ள புயற்காற்று அடிக்கும்' எனவும்; (5) பெரிய செதிள்களா யிருக்குமாயின் 'பனி' என்றும்; (6) மேல் பாகத்தில் நூல்போலிருந்தால் 'மழையுள்ள காற்று' என்றும்; பல பல விதமாய்க் காலபேதங்களை அறிந்துகொள்ளலாம்.

இது ஓர் நூதனமானதும் அருமையானதுமான கருவியாகும். இதனைச் செய்வதின் உதவியால் நல்ல ஊதியத்தை அடையலாம்.

**கலிவ. தி. ர. கோபால கிருஷ்ணன்,**
கைத்தொழில் ஆசிரியர், திண்டிவனம்.

## வைத்தியப் பகுதி.

### ஜனனம்.

நாதத்திற்குக் கருப்பமுண்டாகச்செய்யும் திரவம் முக்கியமாய் புருஷனது பீஜத்திலிருந்து பொசியும் விந்துவாகும். பக்கத்துக் கொன்றாக இரண்டு பீஜங்களுண்டு. பீஜக்கொடிகள் அவற்றைத் தொங்கவைத்துக்கொண்டிருக்கும். பீஜத்தை மூடிக்கொண்டிருக்கும் சர்மத்திற்கு அண்டகோசம் என்று பெயர். இடதுபக்கத்துப் பையானது எப்போதும் கொஞ்சம் நீண்டிருக்கும். பைக்கு மத்தியில் ஒரு தடித்த சவ்வு, பையை இரண்டு பாகங்களாகப் பிரித்து விடுகின்றது. அண்டகோசம் எப்போதும் சுருங்கித் தளர்ந்

ததுபோலிருக்கும். நாடிகள், நாளங்கள், நரம்புகள் இவைகளுடன் விந்துவாகியும் கலந்து சேர்ந்து கட்டப்பட்டிருக்கிற கொடிக்கு பீஜக்கொடியென்று பெயர். இக்கொடி பீஜத்திலிருந்து மேலுக்கேறி, பீஜக்கொடித் துவார வழியாகச் சென்று வயிற்றுக்குள் இறங்கிவிடும். இதை சவ்வு சுற்றிக்கொண்டிருக்கும். இடதுபக்கக்கொடி கொஞ்சம் நீண்டிருக்கும். பீஜமானது சிறுத்து உருண்டு சுமார் $1\frac{1}{2}$ அங்குலம் நீளமுள்ளதாய், பக்கங்கள் உள்ளடங்கியிருக்கும். மேலாக உருண்டையாய் ஒன்று காணப்படும். அதனை விருஷ்ணத்வயம் என்று சொல்லலாம். பீஜத்தை ஒரு வெண்மை சவ்வு மூடிக்கொண்டிருக்கின்றது. அதற்கு வெளிப்புறத்தில் நித்தாசில்லி கவசமு மிருக்கின்றது. அதற்கு பீஜச் சவ்வு என்று பெயர். அது முகமற்ற ஓர் பை. அதற்குள் ஜலம் சேர்ந்தால் நீரண்டம் எனப் பேர்பெறும். காற்றுச் சேர்ந்தால் அண்டவாதம் எனப் பேர்பெறும். மெத்தவுஞ் சிறிதான விந்துக் குழல்கள் சேர்ந்து அவற்றால் பீஜம் ஏற்பட்டிருக்கின்றது. இவ்விந்துக்குழல்கள் ஒன்றோடொன்று சேர்ந்து பின்னிக்கொண்டு கடைசியில் ஒரே குழலாக இருக்கும். இப்படி ஒன்றாகச்சேர்ந்த குழலுக்கு விந்துவாகி என்று பெயர். விந்துவாகி பீஜக்கொடியின் பின்புறமாக மேலுக்குச்சென்று அங்கிருந்து பீஜக்கொடித் துவாரத்தின் வழியாய் வயிற்றுக்குட்சென்று மூத்திரப்பைக்குப் பின்புறமாக அதின் அடிக்கிறங்கி, அந்த ஸ்தானத்தில் இருக்கும். இந்திரிய கமலக் குழலோடு சேர்ந்து நீர்த்தாரையில் முடியும். அதற்கு ஸ்கலிதக் குழல் என்று பெயர். விந்து, பீஜத்தில் ஜனித்து விந்துவாகி வழியாய் வயிற்றுக்குட் சென்று மூத்திரப்பைக்கடியில் இறங்கி இந்திரியக் கமலங்களில் தங்கியிருக்கும். போககாலங்களில் அது வெளிப்பட்டு நீர்த்தாரை வழியாக இறங்கிப் பெண்குறியில் ஸ்கலிதமாகி விடுகின்றது. விந்துவைப் பூதக்கண்ணாடியால் பார்த்தால் புழுக்கள் காணப்படும். அவைகளுக்கு விந்துக்கிருமிகள் என்று பெயர். அவை பெருத்த சிரசோடும் நீண்ட வாலோடும் இருக்கும். விந்துக்கிருமிகள் நாதத்தோடு சேர்ந்து கருப்பற்றும்படி செய்யும். சகலவிதப் பிராணிகளின் கருப்பத்தையுண்டாக்கும் திராவங்களிலும் விந்துக்கிருமிகளிருப்பதினால் கருப்பற்ற அவைகளவசியமானவையென்பதும், அவை நாதத்துடன் சேரவேண்டுமென்பதும் நன்றாய்த் தெரிந்த விஷயங்களே. ஆனால் அவைகள் எப்படிச் சேருகின்றனவென்பது தெரியவில்லை.

பெண்களின் ஜனனேந்திரியங்களில் சினைப்பைகள் என்று சொல்லும் நாதாஸ்யங்கள் இரண்டு நாதியத்தை யுண்டாக்க உதவுகின்றன. சினைப்பாதையொன்று ஒவ்வொரு சினைப்பையுடன் தொடர்ந்திருக்கின்றது. இதின் வழியாய் நாதியம் நாதாஸ்யத்தினின்று கருப்பாசயத்திற்குப் போகும். நாதியம் ஜனனமுண்டாகும்பட்சத்தில் கருப்பையில் படிந்து பிண்டமாக வளர்ந்து தாயினின்றும் பிரிந்து பிரத்தியேகமாய் வளரும் சக்தி வருமளவுமிருக்கும். தவிர புருஷ ஜனனேந்திரியக் கருவியைப் பெற்றுக்கொள்ள ஒரு குழலும் அதைச்சேர்ந்த உபாங்கங்களுமிருக்கின்றன. இக்குழலுக்கு யோனியென்று

பெயர். சினைப்பைகள் பெண்களின் இடைக்குழியில் பக்குத்துக்கொன்றாய் இலுப்பைக்கொட்டைகளைப்போல் உருண்டு கொஞ்சம் அமுங்கியவைபோலும் காணப்படும். ஒருமுனை கருப்பையோடும், மற்றொருமுனை நாதக்குழலோடும் நார்க்கயிறுகளால் சேர்க்கப்பட்டிருக்கின்றன. கருக்கூட்டை, தின்மையான நார், சாலம் இவைகளாலாகிய தசைகள் சுற்றிக் கவசம்போல போர்த்துக்கொண்டிருக்கின்றன. இதை அறுத்துப் பார்வையிட்டால் சிறிய அணுக்கள் காணப்படும். அவைகளுக்கு நாதமுட்டைகள் என்று பெயர். அவற்றை நாதக்குமிழ்கள் என்றும் சொல்லலாம். கருக்கூடொவ்வொன்றும் 1, $1\frac{1}{2}$ அங்குல நீளமாகவும் $\frac{3}{4}$ அங்குல அகலமுள்ளதாகவும் சுமார் $\frac{1}{2}$ அங்குல கனமுள்ளதாகவு மிருக்கின்றது. நாதக்குழல் பக்கத்துக் கொன்றாகத் தாரையைப்போல நீண்டு சினைப்பைகளுக்கும் கருப்பையின் மேல்முனைக்கு மிடையி லிருக்கின்றது. அது 4, 5 அங்குல நீளமுள்ளதாக விருக்கின்றது. கருப்பாசயத்துடன் சேருமிடத்தில் நாதவாகி அகலமற்றொடுக்கமாயிருக்கும். கருக்கூட்டை நோக்கிச் செல்லுவதில் போகப்போகக் கொஞ்சம் விரிந்து காணும். மற்றமுனை குஞ்சம்போல விரிந்து அந்தரமாயிருக்கும். குஞ்சத்தின் ஒரு பிரிவு மாத்திரம் கருக்கூட்டை ஒட்டியிருக்கும்; மற்ற பிரிவுகள் கட்டுப்படாமல் மிதந்து கிடக்கின்றன. நாதவாகியின் குழாய் மிகச் சிறியதாயிருக்கிறது மல்லாமல் கருப்பையைத் தொடருமிடத்தில் அதிக நுண்ணியதாய் முட்புகக்கூட இடமற்றதாய்க் காணும். குழாயின் மற்றமுனை வயிற்றுக்குழியை முட்டியிருக்கின்றது. நாதவாகி மேற்பக்கம் அந்தர்வேஷணத்தால் மூடியிருக்கின்றது. உட்பக்கத்தில் குழலில் சிலேஷ்மச்சவ்வும், பரிதிகப் பரிஸ்தாபிதமும் இருக்கின்றன. அந்தர்வேஷணத்திற்கும், சிலேஷ்மச் சவ்வுக்கு மிடையில் அதன் பித்திகள் கருப்பைபோலவே நார்த்தசைகளா லமைக்கப்பெற்றிருக்கின்றன. கருப்பாசயம் தட்டையாய் மேற்புறம் அகன்று விரிந்தும், கீழ்ப்புறம் உருண்டு சிறுத்தும் காணப்படும். கருப்பம் தரிக்காத சமயங்களில் சுமார் மூன்றங்குல நீளமுள்ளதாயும், அகலத்தில் கருப்பாசய அடியென்று சொல்லும் மேற்பக்கத்தில் இரண்டங்குலமுள்ளதாயும், கழுத்தென்று சொல்லும் கீழ்ப்பக்கத்தில் சிறுத்து அரையங்குல முள்ளதாயு மிருக்கின்றது. அடிக்கும் கழுத்துக்கும் இடையிலிருக்கும் பாகத்திற்கு உடலென்றும் சொல்லுகிறார்கள். இவ்வுடல் சுமார் ஒரு அங்குல கனமுள்ளதா யிருக்கின்றது. கருப்பாசய வியூகனத்தில் மூன்றுவித முக்கிய பித்திகளைக் காணலாம். இப்புரைகள் முறையே நிணநீர்ச்சவ்வும், நார்ப்பைச் சவ்வும், பேசிச் சவ்வும், சிலேஷ்மச் சவ்வுமாக விருக்கின்றன. கருக்குழியின் வடிவு கருப்பையை ஒத்திருக்கும்; கருப்பம் தரியாத காலங்களில் மிகச் சிறியதாயிருக்கும். அதன் ஒவ்வொரு பக்கத்திலிருக்கும் சிலேஷ்மச்சவ்வுகள் ஒட்டியதுபோல காணப்படும். குழியில் சவ்வுகளுக்கிடையில் சிலேஷ்மந்தான் கொஞ்ச அளவு இருக்குமென்று தோன்றுகிறது. அதன் மேல்பாகத்தில் இருபுறத்திலும் நாதவாகியின் குழாய்வந்து சேருகின்றது. அடிப்பக்கத்தில் பெண்குறியுடன் சேரும் துவார மிருக்கின்றது. இந்தவாயில் முன்பக்கத்திலும், பின்பக்கத்திலும் உதடுகள் இருக்கின்

றன. பெண்குறி சவ்வால் ஏற்பட்டது; 5, 6 அங்குல நீளமுள்ளது. குறுக்காகக் கீழுக்கும் முன்னுக்கும் போயிருக்கின்றது. கருப்பையின் கழுத்திலிருந்து புறஸ்தான ஜனனேந்திரியங்க ளிருக்குமிடத்திற்கு வருகின்றது. இதின் உட்புற சிலேஷ்மச்சவ்வு சாதாரணமாய்ச் சுருங்கியகாலத்தில் மடிப்பு மடிப்பாயிருக்கும். சிலேஷ்மச் சவ்வுக்கு வெளிப்புறத்தில் பெண்குறியின் பித்துக்கள் நார்ப்பைத்தசையா லமைக்கப்பட்டு இருக்கின்றன. இத்தசைகளுள்ளும் குழாயின் கீழ்ப்பாகங்களில் முக்கியமாய் ஒரு படை எழும்பக்கூடிய தசையுமிருக்கின்றது. பெண்குறியின் கீழ்ப்பாக வாயிலில் யோனிபந்தனம் என்னும் வட்டவடிவுப் பேசியிருக்கின்றது. யோனிவாசலின் வெளிப்புறத்தில், கன்னி யழியாதவர்களுக்குச் சந்திரப்பிறைபோலொத்த சவ்வு மூடிக்கொண்டிருக்கும். அதற்கு சவ்வினம் என்று சொல்லலாம். அல்குல் ஸ்தானத்திலிருக்கும் உறுப்புக்களாவன :— கடிதடம், நிதம்பங்கள், புழுக்கை, சந்திரநாடி, யோனிலிங்கம், நீர்த்துவாரம், யோனிவாசல் ஆகியவைகளாம். இவைகளுக்கே அல்குல் என்று பெயர். அடிவயிற்றின்கீழ், மேடாய், மிருதுவாயிருக்கிற ஸ்தானத்துக்குக் கடிதடம் என்று பெயர். அது அவ்விடத்திலிருக்கும் எலும்பின்மேல் படிந்து கொழுப்படைந்து ரோமங்கள் மூளைத்திருக்கும். நிதம்பங்கள் அல்குலில் சர்மமானது மடிந்து நீண்டு பக்கத்துக்கொன்று யிருக்கின்ற உறுப்புக்களாம்; இவற்றிற்கு உதடுகள் என்று சொல்வது வழக்கம். இவைகளில் கொழுப்படைந்து ரோமங்கள் மூளைத்திருக்கும். உதடுகளின் மத்தியமாயிருக்கிற பிளப்புக்குப் புழுக்கை அல்லது அல்குல் பிளவையென்று பெயர். நிதம்பங்களானவை கீழுக்கிறங்கி ஒன்றோடொன்று கூடியிருக்கிற ஸ்தானத்திற்கு உபஸ்தக்கவை என்று பெயர் வழங்கலாம். அது பிரசவகாலங்களில் சிசுவின் சிரசு வெளிப்படும்பொழுது கிழிந்துவிடும். ஆசனத்துக்கும் உபஸ்தக்கவைக்கும் மத்தியிலுள்ள பாகத்திற்குப் பகம் என்று பெயர்.

(தொடரும்) மே. மாசிலாமணி முதலியார், டாக்டர்.

## பெண்மக்கள் பகுதி.

### மாதரும் குடும்பமும்.

கடவுள் படைப்பிற் குட்பட்ட சிறந்த சிருஷ்டியாகிய மனிதவர்க்கத்தில் ஆண்பெண் என இரண்டு இயற்கைப் பிரிவுகளிருக்கின்றன. மற்றைய பசுபக்ஷியாதிகளிலும் இப்பேதம் உண்டாயிருப்பினும் நாம் வரையப்புகுந்தது மனிதரைப்பற்றியே யாதலின் அதைமட்டும் எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இலக்கண நூலாரும் மனிதவர்க்கத்திலேதான் ஆண்பால் பெண்பால் என்னும் பாகுபாடுகள் செய்திருப்பதையும் அறிக. மனிதரைச் சிருஷ்டித்த கடவுள், யாவரையும் ஒரேதன்மையாகப் படைக்காமல் இவ்வாறு இரண்டு வகையாக உண்டாக்கியதற்கு, ஒரு காரணமிருக்க வேண்டும்,

சர்வஞ்ஞராகிய ஈஸ்வரன் ஒரு நோக்கமுமில்லாமல் இவ்வாறு படைத்திருக்க மாட்டார்.

மனிதருக்கும் மற்றைய விலங்கு பறவை முதலியவற்றிற்கும் உருவம் அறிவு முதலானவைகளில் வித்தியாச மிருப்பது மல்லாமல் வாழ்க்கையிலும் ஓர் முக்கிய வேறுபாடு இருப்பதாகக் காணலாம். அவைகள் பிறவற்றைச் சார்ந்து சீவியாமல் தனித்துச்சீவிக்கின்றன. மனிதர்மட்டும் பிறரைச்சார்ந்தே பிறர் உதவியைக் கொண்டே சீவிக்க வேண்டியவ ராகின்றனர். பறவைகள் தாங்கள் வசிக்கத்தக்க வீட்டைத் தாமே அமைத்துக்கொள்கின்றன. பசுக்கன் றுனது தாய்வயிற்றி லிருந்து பிறந்த சிறிதுநேரத்திற் கெல்லாம் தன்தாயின் பின் ஓடுகின்றது. வயதுமுதிர்ந்ததாகிய வயோதிக பருவத்தில் தம்மக்களிடத் தாவது வேறு உறவினரிடத்தாவது அண்டி அவர்களுதவியைப்பெற்று, காலத் தைக் கழிக்க வேண்டியவர்களாகிய மனிதரின் நிலைமை அவைகளுக்கில்லை. அவை இயற்கையாகவுள்ள பொருள்களை யுண்டு உயிர்வாழ்கின்றன. இயற்கை யைச் செயற்கையாக மாற்றிப் புசித்து ஜீவிப்பர் மனிதர். இதனுல் மனிதர் ஒருவரோடொருவர் சேர்ந்தே வாழவேண்டியவரா யிருக்கின்றனர். தவிர இரண்டு முக்கியகாரியங்கள் இவர்களின் சீவியத்திற்கு அத்தியாவசியமாயிருக் கின்றன. ஒன்று பொருள்தேடுதல்; மற்றொன்று வீட்டுக்காரியங்களைக் கவ னித்தல். இவ்விரண்டு காரியங்களையும் ஒருவரே செய்துகொள்ளுதல் அசாத் தியமாகும். ஆகவே, ஒருவர்க்கொருவர் துணையாகப் பலர் சேர்ந்து வாழ்வதே மனிதப்பிறவியின் இயல்பாகும். அவ்வாறு கூடிவாழ்வோர் ஒருவரிடத்தொரு வர் அன்புடையரா யிருக்கவேண்டும். இன்றேல் அவர்களது சேர்க்கை நீடித் திராது. (அவ்வன்புண்டாவதற்கும் ஓர் நிமித்தம் வேண்டும்). அன்றியும், ஒவ் வொருவர்க்கும் தமது விருத்தாப்பிய காலத்தில் தம்மை ஆதரிக்கவும் தமக் குப்பின் குடும்பபாரத்தை மேற்கொண்டு நடத்தவும் கடமைப்பட்டவர்களும் தேவை. அவ்வாறு கடமைப்பட்டவர் புத்திரரேயாவர். ஆதலால் ஒருவர்க் கொருவர் இன்பம் தரக்கூடியவர்களாயும் புத்திரோற்பத்திக்குக் காரணராயு மிருப்பதற்காக ஸ்திரீயும் புருஷனும் பிணைக்கப்பட்டனர். பெற்றுவளர்த்தோர் என்ற முறையில் புத்திரன் தாய்தந்தையரிடத்து அன்பு பாராட்டக் கடமைப் பட்டவனுகிறுன். ஒருதாய் வயிற்றில் பிறந்தோர் சகோதரர் என்னும் முறை யில் ஒருவரிட மொருவர் அன்புள்ளவராகின்றனர். இவ்வாறே தாயுடன் பிறந் தோரும் தந்தையுடன் பிறந்தோரும் மனைவியை யீன்றோருமாகப் பலர் உற் றுரும் உறவினருமாகி ஒருவரிடத் தொருவர் அன்புடையவர்களாயும் சுபாசுப காலங்களில் ஒன்றுகூடிக் கூடுமான உதவிசெய்ய வேண்டியவர்களாயும் அமைக்கப்பட்டனர். இவ்வாறுன வாழ்க்கைக்குப் பெரியோர் இல்லறம் எனப் பெயரிட்டு விருந்தோம்பல், துறவோர்க்களித்தல் முதலிய பல அறங்களை அவ்வில்லறத்திற்குரிய ஒழுக்கங்களாக அமைத்திருக்கின்றனர். (இல்லறத் தார்க்குரிய கடமைக ளின்னின்னவை யென்பதை அடுத்தசஞ்சிகையில் கூறு வாம்.) ஆகவே, இல்வாழ்க்கையை யுடையோர்க்கு அன்பும் அறனும் இன்றி யமையாதனவாம். இதுபற்றியே நாயனுர்,

"அன்பும் அறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது"

எனத் திருவாய் மலர்ந்தருளினர். நிற்க.

மனிதவாழ்க்கைக்கு அத்தியாவசியமானவை யென்று முற்கூறிய பொருள் சம்பாதித்தல், வீட்டுக்காரியங்களை ஒழுங்காகச் செய்தல் என்னும் இரண்டு காரியங்களில், புருஷர் பொருளீட்டும் காரியத்தையும், ஸ்திரீகள் வீட்டுக்காரியத்தையும் இயற்றுவதற்காக அமைக்கப்பட்டனர். ஏன் இவ்வாறு ஏற்படுத்தவேண்டும் ? புருஷர் வீட்டுக் காரியங்களையும் ஸ்திரீகள் வெளிக்காரியங்களையும் ஏன்செய்தல் கூடாது ? செய்தாலென்ன ? செய்யமுடியாதா ? என்னும் இத்தியாதி சந்தேகங்கள் இங்கு உண்டாகின்றன. (தொடரும்)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

## விரதப் பகுதி.

### தீபாவளிபண்டிகை அல்லது நரகசதுர்த்தசி.

**தீபாவளி** என்பது தீபத்தின் ஒழுங்கு அல்லது வரிசை என்னும்பொருளது.

இது ஐப்பசிமாதம் கிருஷ்ணபட்ச திரயோதசி இரவில் சதுர்த்தசி சம்பந்த மடைகையில் வருவது. மார்வாரி மரபினரே இதை உள்ளபடி யனுஷ்டித்து மகிழ்பவர். நம்மவரிற் பலர் இதனை மாமிசாகாரம் மறுக்காது அருந்தற்குரிய மகாபண்டிகையெனக் கொண்டாடுவர். இது இவ்வருஷ ஐப்பசிமீ 19உ வியாழக்கிழமை (4-10-26) வருகிறது. இதன்விருத்தாந்தம் வருமாறு:-

நரகாசுரனென்னும் நாமதேயம் பூண்டானொருவ னிருந்தான். இவன் வராகவுருக்கொண்ட விஷ்ணுமூர்த்திக்குப் பூமிதேவியிடம் பிறந்த அசுரன்; பிராக்சோதிஷம் என்னும் பட்டணத்தை ஆண்டு வந்தவன்; துவஷ்டாவின் குமரியாகிய கசேரு என்பவளை, யானை வடிவங்கொண்டு சென்று சிறைசெய்தவன். அயக்கிரீவன், பஞ்சசன், நிசும்பன், பிராபணன், முரன் என்பவர்களை மந்திரிமார்களாக வுடைத்தா யிருந்தான். இவனுடைய பிள்ளையின்பெயர் பகதத்தன்.

துர்க்குணத்தையும் துர்ச்செயலையுமே ஆபரணமாகக் கொண்டு உலகை வருத்திவந்த இவன், ஒருகாலத்தில் அதிதி என்னும் ரிஷிபத்தினியின் காதணியையும், வருணனது குடையையும், மந்தரகிரியின் சிகரத்தையும் கவர்ந்து சென்றனன். தேவர், சித்தர், கின்னரர் என்பவரது கன்னிகைகளையும், இராஜபுத்திரிகளையும் திருட்டுத்தனமாசத் தூக்கிக்கொண்டு போய்த் தன்னுடைய இருப்பிடத்தில் ஒளித்துவைத் திருந்தான். தேவேந்திரனுடைய ஐராவதம் என்னும் வெள்ளையானையையும் அபகரிக்க முயன்றான்.

இக்கொடுமைகளைச் சகியாத இந்திரன் கிருஷ்ணமூர்த்தியிடம் முறையிட்டுக்கொள்ள, அவர் சத்தியபாமா வென்னும் பத்தினி சகிதராய், கருடாரூடராய், நரகாசுரன் பட்டணத்தை யடைந்து அந்த அசுரனையும் அவனுடைய பரிஜனங்களையும் வதைத்து, அவனால் சிறையுற்றிருந்தவர்களை யெல்லாம் மீட்டு அவரவர் வாசஸ்தலஞ் செல்லுமாறு பணித்தருளினர்.

இந்த அசுரன் இறந்ததினம் ஐப்பசிமாதம், கிருஷ்ணபட்சம், சதுர்த்தசி. அத்தினத்தில் உஷத்காலத்தில் அப்பியங்க ஸ்நானம் புரிபவர், காவேரிகங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தவரடையும் பலனையடையவும், யாவரும் புதிய ஆடைகளணிந்து, உத்தம பண்டு பலகாராதிகளை யுட்கொண்டு ஆனந்தித்திருக்கவும் அருள்புரியுமாறு சாக்ஷாத் கிருஷ்ணபகவானை நரகாசுரன் வேண்டிக்கொள்ள அவர் அவன் விரும்பியபடியே வரம் தந்தருளினர்.

அவ்வாறே தேவர்களும், மக்களும் இப்பண்டிகையை ஷை நாளில் கொண்டாடி வருகின்றனர்.

நரகாசுரனால் கவரப்பட்ட தேவர்களுடைய பொருள்களை எடுத்துக்கொண்டு கிருஷ்ணபகவான் தேவலோகஞ் சென்று தேவர்கள்வணங்க அவர்களுக்கு அவரவ ரிழந்தபொருளைக் கொடுத்தருளினர். அப்போது அங்கிருந்த பாரிஜாதத்தருவைத் துவாரகைக்குக் கொண்டுவர வேண்டுமென்று சத்தியபாமை வேண்ட அத்தேவியின் மனோரதப்படி பகவான் அத்தெய்வத்தருவை வேரோடு பெயர்த்துவந்து துவாரகாபுரியில் வைத்தருளினர்.

இந்திராணியால் மிகவும் பிரியமாக வளர்க்கப்பட்டு வந்த பாரிஜாதத்தரு பூலோகத்திற்குக் கொண்டுபோகப் படுவதுகண்ட தேவராஜன் தன்பரிவாரங்களுடன் பகவானிடம் போர்புரிந்து தோல்வியுற்றான். இந்தப் போரைக் குறிப்பதற்கே இளைஞர்கள் படாஸ் முதலிய சீனவெடிகளை அத்தினம் சுடுவதுண்டு.

பணியாளர்களுக்கு எஜமான்மார்கள் இந்த நாளில் புதுவேஷ்டிகள் பரிசளிப்பார்கள். பெரும்பான்மையும் தென்னாட்டு மக்கள் விலையேறப்பெற்ற ஆடைகளை வாங்கி அணிந்து களிகூருவார்கள்.

ம. இராஜகோபால பிள்ளை.

குறிப்பு:—நமது ஆனந்தபோதினிச் சந்தாதாரராகிய (செ. 10563) நண்பர், பொ. தங்கவேலு என்பவரும் பிறரும் இவ்விஷயமாக வியாசங்கள் எழுதியனுப்பி யிருக்கின்றனர். அவர்களுடைய கருத்தையும் தழுவியே இது பிரசுரிக்கப்பட்டது. ப-ர்.

# கேதார கௌரி விரதம்.

இது ஒரு சிறந்த விரதம்-பரமசிவனை நோக்கிப் பார்வதிதேவியார் அனுஷ்டித்து இஷ்டசித்திபெற்ற நோன்பு; வேண்டிய நலங்களை வேண்டியவாறே யளிக்கவல்லது; இவ்வருஷம் ஐப்பசிமாதம் 20-ம் தேதி (5-11-26) வெள்ளிக்கிழமை வருகிறது. இதன் வரலாறு:—

ஒருசமயம் கைலயங்கிரிக்குச் சென்ற பிருங்கிமஹாரிஷி பரமசிவனுடன் வேறாக வீற்றிருந்த பார்வதிதேவியை விட்டுப் பரமசிவனை மாத்திரம் வணங்கினார். அதுகண்ட தேவி மனவருத்தங்கொண்டு சிவபிரானிடம் முறையிட, அவர், தேவியைநோக்கி "பிருங்கிமுனிவன் முத்தியின்பம் ஒன்றையேகோரியவனாதலின் இவ்வாறு செய்தனன்" என்றனர். இந்தவார்த்தையை அங்கீகரியாது தேவி முனிவரைப்பார்த்து "நீர் என்னை மதியாதபடியால் உமது தேகத்திலுள்ள எனது இரத்தத்தையும் மாமிசத்தையும் வேறுபடுத்திவிட்டுப் பிறகு உமது இஷ்டம்போல சிவமூர்த்தியைப்பணியும்" என்றனர். அவ்வண்ணமே முனிவர்செய்ய, சிவபெருமான் அவர் விஷயத்தி லிரக்கங்கொண்டு அவருக்கு மூன்றுங்கா லொன்றும் ஒரு ஊன்றுகோலும் தந்தருளினர். பார்வதிதேவி "நாம் நமது கணவருடைய திருவுருவில் ஒருபாகத்தினளா யிருந்தால் நமக்கித்தாழ்வுண்டாகாது" என்றெண்ணி, புரட்டாசி மாதத்து சுக்கில பக்ஷப் பிரதமையன்று பூமியின்கண் வால்மீகிரிஷியின் ஆச்சிரமமடைந்து, தனது எண்ணம் நிறைவேறுவதற்கான உபாயத்தை நாடி ஒரு வில்வமரத்தடியி லிருந்தனர். நவமியன்று (ஒன்பதாம் நாள்) வால்மீகர் வில்வமரத்தடியில் வீற்றிருக்கும் தேவியைச்சேவித்து அவருடன் குசலம் உசாவினார். தேவி முனிவரை நோக்கி "மாதவரே! நான் அரியதொரு விரதத்தைப் புரிய விரும்புகிறேன். நூதனமானது ஏதாவதொன்று உமக்குத் தெரிந்திருந்தால் அதனை யறிவிக்கவேண்டும்" என்று வினவினர். முனிவர் "தாயே! நிலவுலகத்தில் இதுவரையில் ஒருவராலும் அனுஷ்டிக்கப் பெறாத விரதம் ஒன்றிருக்கிறது. அது 'கேதாரீசுவர' நோன்பு. இந்நோன்பை அனுஷ்டிப்பவர் எப்பலனை வேண்டினும் அப்பலனைத் தடையின்றி யடையக்கூடும். புரட்டாசி மாசத்து சுக்கிலபக்ஷ தசமிமுதல் இந்நோன்பை ஆரம்பித்து கிருஷ்ணபக்ஷ அமாவாசைவரை இருபத்தொருநாள் நோன்பிருக்க வேண்டும். இருபத்தொரு நாளும் காலை, பகல், மாலையாகிற மூன்று காலத்திலும் ஸ்நானஞ்செய்து சுத்தியாக ஒரு ஆலமரத்தின்கீழ் மணலால் லிங்கம் பிடித்து வைத்து ஒரு வெல்லவுருண்டை, ஒரு சந்தனவுருண்டை, ஒரு மஞ்சள் உருண்டை, ஒரு அதிரசம், ஒருதேங்காய், ஒருபழம், ஒரு வெற்றிலை, ஒரு பாக்கு, ஓரிழைநூல் இவைகளைவைத்து லிங்கத்திற்கு நைவேத்தியம் செய்து, தூபதீபங்கொடுத்து வரவேண்டும். இப்படியே சாமான்களைத்தினம் ஒவ்வொன்றாக அதிகப்படுத்தி இருபத்தோராவது நாள் அமாவாசையன்று எல்லாம் இருபத்தொரு சாமான்களுடன் நைவேத்தியஞ்செய்து தூபதீபங்கொடுத்து வில்வார்ச்சனை முதலியவை செய்யவேண்டும். இருபத்தொரு இழைநூலையும்

ஒன்றாகச்சேர்த்து இருபத்தொரு முடியிட்டுக் கயிறாக்கி, கையில்கட்டிக் கொள்ளவேண்டும். இவ்விதம்செய்தால் சிவபெருமான் பிரசன்னராய் வேண்டும் வரம் தந்தருள்வார்'' என்று சொல்லினர். பார்வதிதேவி அவ்விதமே நோன்பிருந்து சிவபிரானிடம் அர்த்தசரீரம் பெற்றும் குறைநீங்கி மகிழ்வுடன் வாழ்ந்திருப்பதால் இந்த விரதத்தை யுலகம்கைக்கொண்டு இஷ்டசித்திகளைப் பெற்று வருகின்றது.

கௌரி, அர்த்தநாரி, கேதாரி என்பன (ஆண்பாகம் பாதி-பெண்பாகம் பாதி என்னும்) ஒரேபொருளைத்தரும் சொற்கள். இந்தநோன்பை நியதியுடன் அனுஷ்டித்து அனேகர் சித்திபெற்றிருக்கின்றனர்.

---

## துலாக்காவேரி ஸ்நானம்.

துலாக்காவேரியின் மான்மியம் அளவு கடந்ததொன்று. இதன் மகத்துவத்தை ஜகன்மாதாவாகிய உமாதேவியாருக்கு சாக்ஷாத் சிவபெருமான் உரைத்தருளி யிருக்கின்றனர். உலகின்கணுள்ள அறுபத்தாறு கோடி தீர்த்தங்களுள் இக்காவேரி தீர்த்தமே தலைமைபெற்றதும், மற்ற தீர்த்தங்களாலடையும் பலன்க ளெவ்வளவையும் ஒருங்கே ஒருமுறை ஸ்நானஞ் செய்வதினாலேயே தரவல்லதும், தெய்வஸ்தலங்கள் பல சூழப்பெற்றதும், எல்லாவுயிர்கட்கும் உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் உண்டுபண்ணக் கூடியதுமானது. இப்புண்ணிய தீர்த்தத்தின் அருளைப்பெற்றே ஏனையதீர்த்தங்கள் மகிமையடைந்து வருகின்றன. "கங்கையிற் புனிதமாய காவிரி" என்றன்றோ இதனைப் பெரியார் புகழ்கின்றனர். தக்ஷணகங்கை என்பது இதுவே.

காவேரி தீர்த்தத்தில் துலாமாதத்தில் (ஐப்பசிமாதத்தில்) ஸ்நானஞ் செய்ய விரும்புவோர் சூரியோதயத்திற்கு முன்னெழுந்து நித்தியகடனை முடித்துக்கொண்டு தினந்தோறும் ஸ்நானஞ்செய்து அந்த மாத முற்றும் ஆகாரமொழித்து, காலை பகல் மாலை என்னும் மூன்றுகாலத்திலும் தெய்வ பூசை இயற்றி, ஐம்புலன்களை யடக்கி, பரமாத்மாவின் திருவடிகளை மறவாதவராய், சித்தசுத்தியுட னிருந்துவந்தால் அழகு, தீர்க்காயுள், அரோகம், சீலம், வல்லமை, நல்ல மனைவிமக்கள், கீர்த்தி, உத்ஸாகம், செல்வம், சுகம், ஈகை, லக்ஷ்மீகரம், மற்றும் வேண்டிய இஷ்ட சித்திகளையெல்லாம் வெகு சீக்கிரத்திலடைந்து வாழ்ந்திருந்து முடிவில் நிரதிசயானந்த நித்தியமுத்திப் பேற்றையும் பெறக்கூடும். கொடும்பாவச் செயல்களைக் கூசாமற்செய்து வருந்துவோரும் இத்துலா ஸ்நானத்தால் நன்மை யடையலாம். தேவர்களும் மகரிஷிகளும் இதன் பிரபாவத்தை விஸ்தரித்துப் பேசுகின்றனர். நற்குண நற்செயல் வாய்ந்த நாதசன்மாவென்னும் வேதியர் தலைவனும், அவன்மனைவி அனவத்தியையும் இவ்வற்புத தீர்த்தத்தால் இருமைப்பேறும் எய்தினர். இன்னும் சேதனாசேதனமான பலவுயிர்களும் இதனால் சுகம் பெற்றிருக்கின்றன.

துலாமாசத்துக் கிருஷ்ணபக்ஷத்து சதுர்த்தசியில் அதாவது தீபாவளியன்று காலையில் தலையில் நல்லெண்ணெய் தேய்த்துக்கொண்டு வெந்நீரில்

முழுகிப் பின் இத்தீர்த்தத்தில் முழுகினால் சகல தோஷங்களும் நிவர்த்தியாய்ச் சுகவாழ்வடைதல் கூடும்.

ம. இராஜகோபால பிள்ளை.

## விநோதப் பகுதி.

### தற்கால நாடகம்.

**த**ற்கால நாடகங்களில் ஸ்திரீ புருஷர்கள் வீணாக வயிற்றுச்சோற்றுக்கும் பணத்தாசைக்கும் நடிக்கும் நடிகர்களாக இருக்கிறார்களே யல்லாது இவர்களால் உலகத்திற்கு க்ஷேமம் கிடையாதென்பது என் அபிப்பிராயம். நவீன நாகரீக நாடகங்கள் எங்கெந்த இடங்களில் விருத்தியடைகின்றனவோ அந்த இடங்களிலுள்ள ஜனங்கள் இரவுகாலங்களில் வெகுநேரம்வரை தூக்கமில்லாமலிருப்பதினால் பகலில் அவரவர்களுக்குரிய தொழிலைச் சரிவரக் கவனிக்கமுடியாமல் வரும்படி யிழந்து கடன் படவும், வியாதி முதலியவைகளால் துன்பப்படவும் நேரிடுகிறது. தற்கால நாடக மேடைகளில் காமத்தை விருத்திசெய்யும் சிற்றின்பப் பாடல்களைப் பாடுவதினாலும், காம இயற்கைத் துர்க்குணங்களையெல்லாம் நடித்துக் காட்டுவதினாலும் பார்ப்பவர்கள் மதி மயங்கி, கற்புநிலை தவறிவிடுவது நிச்சயம். கற்பிற்சிறந்த சதாரம் முதலிய சரித்திரங்களைத் தற்கால நாடகமேடையில் நடித்துக்காட்டும் ஆபாசமுறைகளை எழுதுவது வீண் வேலையாகும். உதாரணமாக, கற்புள்ள சரித்திரம் நடத்துவது வெகு அபூர்வம். அவ்வித சரித்திரம் நடத்தப் போதிய நடத்தை நடிப்பவரிடம் இல்லை. தற்கால நாடக மேடைகளினால் உலக ஜனங்கள் கெடுவது ஒருபுறமிருக்க, பள்ளிக்கூடங்களிலும் நம் பிள்ளைகளைக்கொண்டு நாடகம் நடிக்கக் கற்றுக்கொடுக்கிறதினால் தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டும் என்றபடி பிள்ளைகள் படிக்க நேரமில்லாமல் ஆடுவதிலும், பாடுவதிலும் மனதைச் செலுத்திவிடுகின்றனர். இவர்கள் கடைசி முடிவாகச் சோம்பேறிகளாய் விடுகிறார்கள். குற்றம் குறைகள் இல்லாத நாடகமேடையே கிடையாது. மதுபானத்தினால் எவ்வளவு கெடுதியோ அவ்வளவு கெடுதி தற்கால நாடகக் கம்பெனிகளினால் உண்டாகிறது. உலகத்திற்கே பஞ்சம் ஏற்படுவதற்கு வழியாகிறது. மற்றும் ஆசாரம் கெட்டு அனாசாரம் ஏற்பட்டு, சிற்றுண்டி ஸ்தலங்கட்கு வியாபார கிராக்கி அதிகமாகி சுகாதார முறைகள் அனுஸரிக்கப் படாமல் வியாதி உற்பத்தியாவதற்கு இடந்தருகிறது. நாடகம் பார்க்க வருபவர்களுக்குப் பலவிதத்திலும் செலவுக்கு வழி ஏற்படுகிறது. இதைக் கண்ணுறும் சகோதர சகோதரிகளை நம்முடைய ஆனந்தபோதினி மூலமாய்க் குற்றத்தைக் நீக்கிக் குணத்தைக் கைக்கொள்ளக் கேட்டுக்கொள்ளுகிறேன். குற்றமிருப்பின் அறிஞர் பொறுப்பார்களாக. சுபம். R. சுப்பாச்சார்.

---

**நூதன சாஸ்திரம்:**—இக்காலத்தில் சுரநோயால் பீடிக்கப்பட்டு நிராதரவாயிருக்கும் ஒருவர் நாவறண்டு, சிலர் வீட்டில் 'கொஞ்சம் வெந்நீர் வேண்டும்' என்று கேட்டால், அங்குள்ளவர்கள், "இராக்காலத்தில் வெந்நீர் கொடுப்பது உயிரைப் பிடித்துக்கொடுப்பதுபோலாகுமே; என்ன ஐயா! இது தெரிந்திருந்தும் இங்கேவந்து வெந்நீர் கேட்கிறீரே; நாங்கள் க்ஷேமமாயிருப்பது உமக்குச் சம்மதமில்லைபோலிருக்கிறது" என்று கடிந்து பேசுகிறார்கள். நோயாளியின் கதி என்னவாகும்? தாகசாந்திக்குத் தண்ணீர் கொடுப்பது மிகுந்த புண்ணியம்; அதிலும் வியாதியஸ்தருக்குக் கொடுத்து உதவிசெய்வது சிறந்த புண்ணியம். இஃதிப்படியிருக்க, இவர்கள் நோயாளிக்கு வெந்நீர் கொடுப்பது கூடாதென்கிறார்களே, இது எந்தச் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறதோ? இவர்கள் படித்த அநீதிசாஸ்திரத்தில் அறையப்பட்டிருக்கிறதுபோலும்.

**அற்புத சுரநோய்:**—இப்போது ரெயில்வே பிரயாணம் செய்பவர்களிடத்தில் நூதன சுரநோய் ஒன்று உண்டாகியிருக்கிறது. ஒரு கம்பார்ட்மெண்டில் இரண்டு மூன்றுபேர் சௌகரியமாய் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். வேறு பிரயாணிகள் வேறு வண்டிகளில் இருக்க இடமில்லாமல் கஷ்டப்பட்டு அதில் இடமிருக்கிறதென்று நுழைந்தால் அவ்வாறு தலை நீட்டியவுடனேயே அங்கிருந்தவர்களுக்கு மேற்கூறிய சுரம் ஆரம்பித்துவிடுகிறது. உடனே அவர்கள் தலைசுற்றி மயங்கி நீட்டிப் படுத்து விறைத்துக்கொள்கிறார்கள். இடந்தேடி வந்தவர்கள் இதென்ன சங்கடமென்று வேறு வண்டிக்குத் திரும்பிப்போனவுடன் படுத்தவர்களுக்கு சுரம் நீங்கி உடனே அவர்கள் எழுந்து உட்கார்ந்துவிடுகிறார்கள். இந்த விநோத சுரத்தின் காரணத்தைக் கண்டுபிடித்து நீக்கும்படி பல அறிஞர் ரெயில்வே அதிகாரிகளுக் கெழுதியும் அவர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை.

**ஒரு கவலை:**—"நாடகக் கம்பெனிகளில் இக்காலத்தில் மிகுதியும் பெண்களே ஆக்டர்களாக இருந்து வருவது மிகுதியும் ஆனந்தத்தைக் கொடுத்து வருகிறது; ஆனால், சில ஆண்மக்களும் இடையில் திரிவது கவலைக்கிடமாயிருக்கிறது; ஆடவர்களே இல்லாமற் செய்துவிடுவது நலம்" என்று நூதன நாகரீக சங்கத்தாருள் ஒருவர் கவலைப்பட்டாராம். அந்நாகரீகத்தில் நுட்பமான பாகந்தெரிந்த மற்றொருவர், "தோட்டிச்சி வேடந்தரித்துவரும் பெண்ணுடன் தோட்டிவேடமிட்டுச் சிங்காரப் பேச்சுப்பேசி எதிர்த்தாடுவதற்கும், சிங்காரரசமுள்ள நாடகங்களில் தலைவியாக வேடந்தரித்துவரும் பெண்ணுடன் தலைவனாக வேடந்தரித்து இன்பரசப் பாடல்களைப்பாடிக் காதல்மொழி கூறிக் களிப்பூட்டுவதற்கும் சில புருடர்கள் இருப்பதுதான் பேரானந்தத்தைத்தரும்" என்றுகூறி அவர் கவலையை மாற்றினாராம். **விநோதன்.**

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# நாவல் பகுதி.

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(142-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆன:—ஆம்; என்மனதில் சில வருடங்களுக்கு முன் நேர்ந்த சம்பவம் கவனத்திற்கு வருகிறது. இதே யமிர்தம்மாளை வேறு இடத்தில் வேறு பெயரோடு ஒரு மாறுவேட விருந்திலே கண்டிருக்கிறேன்.

இதைக்கேட்டதே அவளுடைய அழகுவாய்ந்த முகம் வெளுத்து விட்டது. "பத்து வருடங்களுக்குமுன் என்னை நீ கண்டாயா?" என்றாள்.

ஆன:—நீ ஜெகநாதன் என்ற பிரக்யாதிபெற்ற கள்ளப்பத்திரம் பிறப்பிப்போனுடன் சேர்ந்துகொண்டிருந்தாய். அப்போது நான் உன்னை யறிவேன்.

இதைக்கேட்ட அமிர்தம்மாள் பிரமையும் மிக்க வியப்புமடைந்து ஆனந்தலிங்கைக் கலவரத்தோடு சற்று நேரம் உற்றுப்பார்த்து மிக்க பயமும் திகிலுமடைந்து கடைசியில், மெதுவாய் "நான் உன்னைப் பார்த்திருக்கவேண்டும்; ஆனால் தவறாய் நினைத்துக்கொண் டிருக்கவேண்டும்" என்றாள்.

ஆன:—இனிமேல் நாம் மனம்விட்டுக்களங்கமின்றிச்சம்பாஷிப்பது எல்லாவற்றிற்கும் நல்லது. நீ யென்னை யாரென்று எண்ணிக்கொண்டிருக்கிறாய்?

அமிர்:—கள்ளப்பயலாகிய மனோகரன் என்றுதான் எண்ணுகிறேன்.

ஆன:—நீ என்ன காரணத்தால் அவன் கள்ளப்பயலென்று கருதுகிறாய்?

அமிர்:—கள்ளங்கபடமறியாத அம்பாலிகை விஷயத்தில் அவன் நடந்து கொண்ட மாதிரிக்காக.

ஆன:—நீ உன் மனப்பூர்வமாய் அவன் அப்படிப்பட்ட கள்ளப்பய லென்று நம்புகிறாயா?

அமிர்:—ஆம்.

ஆனந்தலிங் அவள் முகத்தை யுற்றுப்பார்த்துவிட்டு "நீ யுண்மையாய்ப் பேசுகிறாயா?" என்றான்.

அமிர்:—என் மனதிற்பட்டதையே கூறுகிறேன்.

ஆனந்:—மிக்க சந்தோஷம். உன் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் அப்படி நினைத்து நடப்பதானால் நான் நினைத்தபடி நீ அத்தகைய குற்றவாளியல்ல.

அமிர்:—உன் அர்த்தமென்ன? எனக்கு விளங்கவில்லையே.

ஆனந்:—ஒருநாளைக்கு யாவும் பூரணமாய் விளங்கும்.

அமிர்:—நீயார்? உண்மையைக் கூறுகிறாயா?

ஆனந்:—நான் மனோகரனல்ல; ஆகையால் நீ நினைத்தபடி நான் கள்ளப்பய லல்ல.

அமிர்:—நீ மிக்க அதிசயமும் மர்மமுமான மனிதன்.

ஆனந்:—ஆனால் நான் சத்தியவான்; இப்போது நான், நீகருதுகிறபடி மனோகரன் அயோக்கியமான கள்ளப்பயலல்ல வென்று ருசுப்படுத்தினாலோ?

அமிர்:—ஆ! இப்போது தெரிந்து கொண்டேன். நீ அக்கொலையாளியிடமிருந்து வந்த தூதன்.

ஆனந்:—ஆம் - அதோடு கறுப்பண்ணனுடைய விரோதி.

அமிர்:—நீ மிக்க தைரிய புருடனே. ஆனால் உன் தைரியம் சோதித்து விடப் படும். சீக்கிரத்தில் நீ கறுப்பண்ணனையே சந்தித்து அவன் எதிரில் அவன்மேல் நீ கூறும் குற்றங்களை நிரூபிக்க நேரிடும்.

ஆனந்:—அதுதான் நானும் கோருவது.

அமிர்:—அப்படியானால் நீ யவனை நேரில் சந்திக்கத் தைரியம் கொண்டிருக் கிறாயோ?

ஆனந்:—"பூரண தைரியமும் துணிகரமும் கொண்டிருக்கிறேன்" என்று கூறிவிட்டு எழுந்து வெளியிற் சென்றான்.

அமிர்தம்மாள் மூடத்தனமாய்த் தன் வார்த்தைகளாலேயே தன் இரகசி யத்தை வெளியிட்டு விட்டாள். கறுப்பண்ணனை வரும்படி அவள் சங்கதி யனுப்பி யிருக்கிறாளென்று ஆனந்தலிங் தெரிந்து கொண்டான். கறுப்பண் ணனோ எத்தகைய அநீதிக்கும் அஞ்சாதகன்னெஞ்சமுடைய பரமதுஷ்டன். ஆகையால் அவனுக்குத்தக்க ஜாக்கிரதையா யிராவிடின் மோசமாய்விடும். ஆகையால் ஆனந்தலிங் செல்லுமிட மொன்றும் கூறாமல் வீட்டை விட்டுச் சென்றான்.

ஆனந்தலிங் மேற்கண்ட விதமாய் வீட்டை விட்டுப் புறப்பட்டதும் கிராமத்திலுள்ள தபாலாபீசுக்குச் சென்று நவீனபுரிக்கு அவசரமான ஒரு சமாசார மனுப்பிவிட்டுத் தான் தங்கியிருக்கும் விடுதிக்குச்சென்று பரம துஷ்டனை தன் எதிரியைச் சந்திப்பதற்குச் சர்வாயத்தமானான்.

இதற்கிடையில் அமிர்தம்மாள் வீட்டில் மிக்க ஆச்சரியமான எதிர்பாராத சங்கதிகள் நடந்தன. அமிர்தம்மாளும் அம்பாலிகையும் நெடுநேரம் கலந்து பேசியபின் இத்தகைய சமயத்தில் வேறுயாரா யிருந்தாலும் எப்படி நடந்து கொள்வார்களோ அதற்கு நேர்மாறாய் நடந்து கொண்டார்கள்.

ஆனந்தலிங் மாலைப்போது மறுபடி அமிர்தம்மாள் வீட்டிற்குத் திரும்பி வந்தான். ஆனால் அங்குக்காணப்போகும் அதிசயசம்பவத்தை யவன் சற்றே னும் எதிர்பார்த்தவனல்ல.

ஆனந்தலிங் வண்டிகள் வருமிடத்தில் நின்றுகொண்டு கறுப்பண்ணன் வருகிறானா வென்று கவனித்துக் கொண்டிருந்தான். அவனோ நாம் முன்பு கூறியபடி முழு ஆஸ்தியையும் அபகரித்துக்கொள்ள முடியாதென்றறிந்து கொண்டதால் பாதியையாவது கொள்ளை கொள்ளத்தக்க சூழ்ச்சிகளைச்செய் துகொண் டிருந்தான். அவன் எவ்வளவுவரையில் பூரணமாய் அம்பாலிகை யை யேமாற்றக்கூடுமோ அவ்வளவு தந்திரங்களையும் செய்து விட்டான். மனோகரன் கள்ளனென்றும், அம்பாலிகையின் தந்தை அவள் இறந்தால் சொத்து முழுமையும் மனோகரன் அடையவேண்டு மென்று ஒரு மரண சாசனம் எழுதிவைத் திருப்பதாகவும் புளுகி, அதனால் அம்பாலிகையைக் கொன்று விட்டால்தான் சொத்தை யடையலாமென்று மனோகரன் அவளைக் கொல்ல முயற்சி செய்ததாகவும் எல்லா ஏற்பாடுகளும் பூரண மாய்ச் செய்துவைத் திருந்தான். அதோடு தான் மனோகரன்மேல் பரிதாப முடையவன்போல் அவனுக்குப் பாதி ஆஸ்தி யளிக்கும்படி சிபாரிசும் செய்தான். ஒருசமயம் அம்பாலிகை யென் ஆஸ்திக்காக என் காதலன் ஆசைப்பட்டவரையில் அவனுக்கே யென் ஆஸ்தி முழுமையும் எழுதி வைத்து விடுகிறேன் என்றாள். அதனால்தான் அவன் மனோகரன் கலியாணம் செய்து கொண்டான் என்று ஒரு பொய்ச்சங்கதியை யுண்டாக்கினான். கபட

மறியாத அம்பாலிகை இவனுடைய தந்திரங்களை யுணராமல் யாவும் உண்மை யென்று நம்பிக்கொண்டாள்.

இந்த ஒருவிஷயத்தில் மனோகரன் தனக்குத் துரோகம் செய்தான் என்று நம்பகம் உண்டாய் விட்டதே, நமது ஆஸ்திக்கு ஆசைப்பட்டு நம்மை யிவன் கொல்ல முயற்சிசெய்தே யிருப்பானென்றும், கறுப்பண்ணன் கூறிய மற்ற விஷயங்க ளெல்லாம் உண்மையே யென்றும் நம்பிக்கொண்டாள். கறுப்பண்ணன் தன்னால் கூடியவரையில் முழுச்சொத்தையும் தானேகைக் கொள்ள வேண்டியதற்குத் தகுந்த சூழ்ச்சிகளை யெல்லாம் செய்தான். பின்னால் எக்காரணத்தாலும், அம்பாலிகையால் கூட அச்சொத்து தன்னிட மிருந்து கைப்பற்ற முடியாம லிருக்க வேண்டியவிதமாய்த் தன் ஏற்பாடுகளைச் செய்துகொண் டிருந்தான். அமிர்தம்மாளும் ஆனந்தலிங்கும் கலந்து சம்பாஷித்த அன்றிரவுதான் தன்காரியத்தைப் பூரணமாய் முடித்துக்கொள்ள வேண்டுமென்று அதற்குத்தக்கபடி எல்லாமோச ஏற்பாடுகளையும் செய் திருந்தான்.

அக்கிரமஸ்தனாகிய அவனுடைய மோச ஏற்பாடுகள் நிறைவேறி விட்டால் பிறகு ஆனந்தலிங்கால் கூட அதைச் சரிப்படுத்த முடியாமற்போய் விடும். ஆனால் கடவுள்தயவால் ஆனந்தலிங் அது நிறைவேறுமுன்னம் தக்க சமயத்தில் தற்செயலாய் அங்குவந்து சேர்ந்தான்.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## நடுவெழுத்து விஞ.

தேவகோட்டை பிர்மஸ்ரீ சி. தெ. சுந்தரராஜய்யங்கா ரவர்களின் விருப்பப்படி அடியிற் குறித்துள்ள விஞவுக்குச் சரியான பதில் (விடை) முதலில் எழுதுபவருக்கு நமது ஆனந்தபோதினி ஒருவருடத்துக்கு இனமாக அனுப்பப்படும். எங்கிருந்து வரினும் நம் கைக்கு முதலிற்கிடைக்கும் விடைக்கே இப் பரிசுகிடைக்கும். நண்பர்கள் வேறுவகை வீண் தர்க்கங்கள்செய்து கடித மெழுதக்கூடாது. அத்தகைய கடிதங்கள் கவனிக்கப் படமாட்டா.

1. உலகத்தின் பெயர்
2. துர்க்கையின் பெயர்.
3. வருஷங்களி லொன்றின் பெயர்.
4. நக்ஷத்திரங்களி லொன்றின் பெயர்.
5. மாதங்களி லொன்றின் பெயர்.
6. கிரகங்களி லொன்றின் பெயர்.
7. விஷ்ணுஸ்தல மொன்றின் பெயர்.

இப்பெயர்களின் நடுவெழுத்தால் (மனிதர்) வேண்டிற் றெல்லாந் தரும் ஒரு மரத்தின்பெயர் வரவேண்டும்.

பத்திராதிபர்.
ஆனந்தபோதினி.

## சென்னை ஆனந்தபோதினியின்,
## பன்னிரண்டாம் வருஷக்கொண்டாட்டத்தைப் பற்றி
# ரெங்கூன் தென்காஞ்சி பர்மா விளம்பர விநோதினி
## பத்திராதிபர் புகழ்தல்.

மண்டல மகண் முகத்தின் மாமணித் திலக மானும்
தெண்டிரை மணியின்சோதி திகழெயில் கனக மாடம்
கொண்டது சென்னையென்னுங் கொடிநக ருதித்து லாவும்
தண்டமிழ் வாணர்மெச்சுஞ் சஞ்சிகை யொன்ற தன்பேர். (1)

புகழது மிகுமாநந்த போதினி யென்று கூறும்
அகழ்வுறு கடலைத் தூய வாடையா மகிழ்ந்து டுத்த
இகழ்வறு பெரிய பூமி யென்றுமஃ திருக்க வல்லோன்
திகழ்வுறு ஞான யோக தேசிகன் கருணை யாலே. (2)

அன்னது பிறந்த மாசம் ஆடியென் றுரைப்பர் மேலோர்
மன்னுமட் சயநா மங்கொள் வருஷத்தில் ஆனிமட்டும்
எண்ணுறு வருஷங் காண்மின் ஈரைந்து மொன்று மாகும்
பன்னுறு மாடிகாணின் பனிரண்டாம் வருஷத் தாதி. (3)

உண்டாட்டங் காட்டு மாதர்க் கொண்பொரு ளழித்துப் பின்னே
திண்டாட்டங் காண்டல் தீது செந்தமி ழேட்டி ஞெண்டுங்
கொண்டாட்டங் கண்டபேர்க்கே குறைவிலாச் செல்வ மன்றிற்
பண்டாட்டங் கொண்ட தேவன் பார்த்தருள் புரிவா னுண்மை. (4)

சீரிலே மிகுந்து நிற்குந் தேசமெங் கும் படர்ந்த
ஊரிலே யுள்ள செய்தி உறைந்தசஞ் சிகை படிப்போர்
நேரிலே கண்டார் போல்வர் நிலையிலாப் பொருளைத் தேடிப்
பாரிலே லோபத் தன்மை படைத்தவ ரெதனைக் காண்பார். (5)

ஒன்றிரண் டாகும் வெண்பொன் உற்றதோர் வருஷச் சந்தா
என்றெணிச் சஞ்சி கைக்கே எழுதவே யரை யணுதான்
வென்றவேன் மன்ன ராளும் மிகுநக ரெல்லாந் தாண்டிச்
சென்றவர் விலாசங் கண்டு திருக்காஞ் சேரு மன்றே. (6)

கருத்திலே மிகுந்த கல்வி கற்றவர் கருணை கொண்டு
பொருத்தமா வெழுதுந் தீஞ்சொற் புகழ்மிகு தமிழின் சாரம்
பெருத்தநீர் ஞால மெல்லாம் பெருகிய வர்த்த மானம்
அருத்தமாம் பன்னூற் செய்யுள் அறியலாம் நன்மை யாவும். (7)

உலகினி லுள்ள தேசம் உற்றரா சாளு மன்னர்
நலமிகு நீதி கீர்த்தி ஞானநூல் செய்த மேலோர்
புலன்மிகு கவிகள் எங்கும் பொருந்திய வொழுக்க மேன்மை
நிலனுறு சமய மெல்லா நேரிலே யறிதன் மானும். (8)

அருந்தவ முடைய யோக ராய்ந்திவை யறிதல் கூடும்
பெருந்தவத் தாலே பெற்ற பிறங்குவான் குளிகை வாயில்
பொருந்தவே யடக்கி நீண்ட புவிவலம் புரிவோர் காணார்
இருந்திடும் இடத் திருந்தே அறியலா மிதனு லெல்லாம். (9)

சவிமிகு மணி யிமைக்குந் தலைமிகு மரவந் தாங்கும்
புவியுள வரையா நந்த போதினி வாழி வாழி
அவிரொளி வேணி யண்ண லறைந்தமுத் தமிழைத் தீட்டும்
கவிஞர்கள் வாழி கற்குங் கருத்தினர் வாழி வாழி. (10)

## முக்கிய கவனிப்பு.

1926ஞ அக்டோபர்மீ 31உவரை நமது ஆனந்த ஆங்கில பாஷா போதினி, ஆனந்தபோதினிச் சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 0—12—0 என்றும், மற்றையர்க்கு ரூ. 1—0—0 என்றும், தபால்சார்ஜ் பிரத்தியேக மென்றும் விளம்பரம் செய்திருப்பதை நண்பர்கள் உணர்ந்திருக்கலாம். ஷை தவணை இன்னும் சில தினங்களே யிருப்பதாலும், அதற்குமேல் சந்தாதாரருக்கு ரூ. 1—0—0 ம், மற்றையர்க்கு ரூ. 1—8—0 ம் விலையாக ஏற்பட்டுவிடுமாதலாலும், சந்தாதாரர்களும், மற்றைய நண்பர்களும் அதற்குள் ஷை குறைந்த விலையில் ஷை புத்தகத்தில் தேவையான காப்பிகளை வாங்கிக்கொள்ளும்படி கேட்டுக்கொள்கிறோம். ஒரே சந்தாதார் அதே விலைக்கு எத்தனை புத்தகங்கள் வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். இங்கிலீஷ் தெரியாதவர்கள் மட்டும் இதை வாங்கிப் படிக்கவேண்டு மென்பதல்ல. இங்கிலீஷ் கற்றுக்கொள்ளும் ஆரம்ப மாணவர்களுக்கும், அவர்களின் பெற்றோர் இதனை வாங்கிக் கொடுப்பதால் மிக்க அனுகூலமுண்டாகும்.

மதிமோச விளக்கத்திற்கும் மேற்குறித்த தேதிவரையே குறைந்த விலைக்குத் தவணை யிருக்கிறது. அதற்குள் நண்பர்கள் ஷை புத்தகத்தையும் வாங்கிக்கொள்வதால் மிக்க இலாபமுண்டு.

மானேஜர்

"ஆனந்தபோதினி" ஆபீஸ்,

சென்னை.

## வர்த்தமானக் குறிப்பு.

**சவப் பாதுகாப்பு:**—ஒரு நிபுணர் ஆராய்ச்சிசெய்து வெங்காயத்தைக் கொண்டோ பூண்டின்சத்தைக் கொண்டோ ஒரு பிணத்தை எத்தனை ஆண்டுக்கு வேண்டுமானாலும் பழுதுறாமல் வைத்திருக்கலாமெனக் கூறுகிறார். பண்டைக்கால எகிப்தியர் இந்த முறையின்படிதான் பிணங்களைப் பதனப் படுத்தி வைத்திருந்தார்களாம். ந-தி.

* * * * * *

**முன்பிறப்பின் உணர்ச்சி:**—ஹல்தவாடி என்ற ஊர் ஸ்டேஷன் மாஸ்டர் பாபுஷ்யாம் சுந்தரலாலின் 7 வயதுப்பெண் தனது முன்பிறப்பின் வரலாற்றைக் கூறுகிறதாம். இது 1918ல் மதுராபுரியில் ஆணுகவிருந்து யமுனாநதியில் முதலைவாயி லகப்பட்டு இறந்ததாம். இதன் இப்போதைய தந்தை மதுராபுரி செல்ல நேர்ந்தபோது அப்பெண் தனது முன்தாய் வீட்டைக்கண்டு அழுததாம். தாயிடம் தான்வைத்த சாமான்கள் சிலவற்றின் அடையாளங் கூறி அவைகளை எடுத்து வரச்சொன்னதாம். யமுனா நதிசென்றபோது ஓவென அலறி அழுது தான் முன்பு இங்கு முதலையால் விழுங்கப்பட்டதைத் தெரிவித்ததாம். ந-தி.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**அக்ஷய௵ கார்த்திகைமீ—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849,**
**பசலி 1336—கோல்லமாண்டு 1102—ஹிஜரி 1345,**
**இங்கிலீஷ் 1926௵ நவம்பர்மீ—டிசம்பர்மீ**

| கார்த்திகை | நவம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | செவ் | ஏகா4-58 து58-3 | உத்22-58 | அ22-58சி | சர்வமத்வ ஏகாதசி, உத்தான ஏகாதசி [மழை |
| 2 | 17 | புத | திர51-15 | ரேவ17-53 | மர60 | பிரதோஷம், 5-க்குள் |
| 3 | 18 | வியா | சது44-50 | அஸ்12-55 | அ12-55சி | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 19 | வெ | ○39-5 | ப✕8-23 | சித்60 | **பௌர்ணமி, கிருத்திகை, அண்ணாமலையார் தீபம், அனுஷாகார்த்திகை** |
| 5 | 20 | சனி | பிர34-40 | கிரு5-8 | அமி60 | அவமாகம், **விஷ்ணுதீபம்** |
| 6 | 21 | ஞா | துதி31-40 | ரோ3-3 | சித்60 | கிரக ஆரம்பம்செய்ய |
| 7 | 22 | திங் | திரி30-23 | மிரு2-30 | அ2-30சி | விவாகம், காதுகுத்த |
| 8 | 23 | செவ் | சது31-5 | திரு3-50 | ம3-50சி | தனுராயனம் 1-45 |
| 9 | 24 | புத | பஞ்33-30 | புன6-55 | சித்60 | சீமந்தம், வித்தியாரம்பம், |
| 10 | 25 | வியா | சஷ்37-48 | பூச11-40 | அ11-40சி | கரிநாள் [கோடியுடுக்க |
| 11 | 26 | வெ | சப்43-10 | ஆயி17-53 | மர60 | |
| 12 | 27 | சனி | அ49-20 | மக25-0 | அ25-0சி | கிருஷ்ணஷ்டமி |
| 13 | 28 | ஞா | நவ55-35 | பூர32-23 | சி32-23அ | சித்திரம் எழுத [க்க |
| 14 | 29 | திங் | தச60 | உத்39-38 | சித்60 | தானியம் களஞ்சியம் வை |
| 15 | 30 | செவ் | தச1-28 | அஸ்46-3 | சித்60 | |
| 16 | டிசம்பர்மீ 1 | புத | ஏ6-18 | சித்51-30 | சித்60 | சர்வமத்வ ஏகாதசி |
| 17 | 2 | வியா | து10-5 | சுவா55-35 | அ55-35சி | **ஜேஷ்டா கார்த்திகை16-8** |
| 18 | 3 | வெ | திர12-40 | விசா58-18 | சித்60 | மாசசிவராத்திரி |
| 19 | 4 | சனி | ச●13-33 | அனு59-40 | சித்60 | **சர்வத்ர அமாவாசை** |
| 20 | 5 | ஞா | அ13-20 | கேட59-55 | ம59-55அ | |
| 21 | 6 | திங் | பிர11-40 | மூல59-10 | சி59-10ம | |
| 22 | 7 | செ | துதி9-8 | பூரா57-35 | சி57-35அ | |
| 23 | 8 | புத | திரி5-48 | உத்55-18 | அ55-18சி | |
| 24 | 9 | வியா | சது1-53 பஞ்57-20 | திரு52-30 | சித்60 | |
| 25 | 10 | வெ | சஷ்52-30 | அவி49-23 | சித்60 | |
| 26 | 11 | சனி | சப்47-20 | சதை45-50 | அ45-50ம | |
| 27 | 12 | ஞா | அ42-0 | பூரட்42-18 | சி42-18அ | |
| 28 | 13 | திங் | நவ36-38 | உத்38-35 | சித்60 | |
| 29 | 14 | செ | தச31-20 | ரேவ35-5 | சித்60 | |
| 30 | 15 | புத | ஏ26-20 | அஸ்31-45 | ம31-45சி | **மூலாகார்த்திகை 23-45 வைதண்ட ஏகாதசி** |

| | | | |
|---|---|---|---|
| | செ | | ராகு |
| குரு | 1௳ விரு-சுக்<br>25 ,, தனு-சுக்<br>27 ,, கும்-குரு | | |
| கே | சனி<br>பு-சூ | சுக் | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE " ANANDA BODHINI" POWER PRESS,**
**15, VENKATESA MAISTRY ST., MADRAS.**